# சிங்கை உலகம்மை
# கலித்துறை அந்தாதி


ஆசிரியர்

மாதவச்சிவஞான யோகிகளின் சிறிய தந்தையாராகிய

**நமச்சிவாயக் கவிராயர்**

உரைவிளக்கம்

குன்றக்குடி ஆதீனப்புலவர்

**வித்துவான். க கதிரேசன் எம். ஏ. பி;எட்**

பூவாளூர். 621 712

அலைபேசி : 98651 93754.

**பாவநாசம்**
என்னும் விக்ரமசிங்கபுரம்
**சிங்கை உலகம்மை கலித்துறை அந்தாதி**
**********************

**காப்பு**

**முந்(து)ஆதி வேதப் பொருளாகும் சிங்கை முதல்விஉல(கு)**
**அந்தாதி பாட அருள்செய்யுமே எந்தையார் சடைமேல்**
**பிந்(து)ஆதி மாகர சந்திர ரேகை பிடித்(து)இதழிச்**
**செந்தாதி னால்ஓர் சிவப்பேற்றும் தாழ்கைச் சிறுகளிறே.**

**குறிப்புரை** : எந்தையார் சடைமேல்............ சிறுகளிறு, ஆதிமுந்து வேதப்பொருளாகும் சிங்கை முதல்வி அந்தாதிபாட அருள்செய்யுமே என்றுகூட்டுக. எந்தையார்= எம்தந்தையாகிய அருள்தரு கல்யாணசுந்தரனார். பிந்து சந்திர ரேகை ஆதி மாகரம் பிடித்து என்க. பிந்து= நீர்த்துளி - கங்கை. சந்திரரேகை= சந்திரகலை. மா கரம்பிடித்து= நீண்டகைகளால் பற்றிக்கொண்டு. செந்தாதினால்= செந்நிறமகரந்தத்தினால். தாழ்கை= நீண்ட துதிக்கையுடையவிநாயகர். ஆதிமுந்து= ஆதிக்கும் முற்பட்ட - அநாதியான. வேதப்பொருளாகும்= வேதத்தின் உட்பொருளாக விளங்கும். சிங்கைமுதல்வி= பாவநாசமாகிய விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள முதற்பொருள். உலகு= அருள்தரு உலகம்மை. அந்தாதிபாட= அந்தாதி நூல்பாட..

**பொழிப்புரை** : எமது தந்தையாகிய அருள்தரு கல்யாணசுந்தரர் ஆகிய பாவநாசரின் சடைமேலுள்ள கங்கை, சந்திரகலை, கொன்றைமலர்க்கொத்து முதலியவற்றைத் தனது நீண்ட கைகளால் பற்றிக்கொண்ட காரணத்தால்தால், கொன்றையின் சிவந்தமகரந்தத்தால், சிவப்பேற்றிக்கொண்ட நீண்டதுதிக்கையுடைய இளமை பொருந்திய விநாயகர்; அநாதியானவளும், வேதத்தின் பொருளாக விளங்குகின்றவளும், சிங்கை என்னும் விக்ரமசிங்கபுரத்தின் முதல்வியும் ஆகவிளங்கும் அருள்தரு உலகம்மைமேல் அந்தாதிநூல் பாட அருள்புரியும்.

**விளக்கம்** : ஆதி= காலஎல்லைக்குட்பட்டது. அநாதி= காலஎல்லைக்குட்படாதது. அம்மை ஆதிக்கும் முந்தியவளாதலின் - அநாதியள் ஆதலின் ஆதிமுந்து என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : எந்தை= மரூஉமொழி. பிந்து - சினையாகுபெயர்.

**நூல்**

**உலகே பொதியமலைப் பாரிசம் நின்றுஉ லாவுசுமங்**
**கலகே கயநடங் கண்டிருப் பாய்இருக்(கு) ஆதிமறைப்**
**பலகேள் விஉண்மைப் பொருளே உன்பதம் பணிவன்அன்பால்**
**விலகேன் நெறியை விலக்கேன் வினையை விலக்குவையே**.

**குறிப்புரை** : உலகே= அருள்தரு உலகம்மையே. பாரிசம்= பக்கம். உலாவு= சஞ்சரிக்கும். சுமங்கல= சுமங்கலியே. கேகயநடம்= மயிலின் நடனம். கேள்வி= மந்திரம். உண்மை= உள்ள. நெறி= உன்னைப்பணியும் ஒழுக்கம். விலகேன்= நீங்கமாட்டேன். வினையை விலக்குவையே= ஊழ்வினையை விலக்கியருள்க.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! பொதிகைமலைப்பக்கம் - சிங்கையில் நிலைத்துச் சஞ்சரிக்கும் சுமங்கலியே! மயிலின் நடனம்கண்டுகொண்டிருப்பவளே! தொன்மையான மறைகளின் பலமந்திரங்களில் உள்ளபொருளே! உன்னுடைய திருவடிகளை அன்புடன்வணங்குவேன்; அதிலிருந்து விலகமாட்டேன், ஒழுக்கத்தில் நீங்கேன்! என்ஊழ்வினையை விலக்கி நலம்அருள்க.

**விளக்கம்** : கதிரவனும் கதிரும்போல் அப்பன்பொருள், அம்மை ஆற்றல். பொருளுக்கும் அதன் ஆற்றலுக்கும் அழிவில்லை, பிரிவுமில்லை என்பது பண்டைமெய்கண்டநூல்கள், இன்றையஅறிவியல் ஆகியன கண்ட பேருண்மையாதலின் அம்மையை “ நின்று உலாவு சுமங்கல “ என்று விளித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : உலகம்மையை உலகே என்றது மரூமொழியின் விளி.

2. **விலக்கும் தரமல்லவே ஐம்புல ஆதிக்கும் வேள்பகைக்கும்**
**இலக்கும் தமியனும் என்நெஞ்சு மோநெட்(டு) இறால்வழிதேன்**
**கலக்கும் பொருநைத் துறைமுக்க ளாஜயன் கைபுனைநித்**
**திலக்குங்கு மத்தனத் தாய்இது வோநின் திருவுள்ளமே.**

**குறிப்புரை** : ஐம்புல ஆதிக்கும் ............என்நெஞ்சுமோ, விலக்கும் தரமல்லவே என்று கூட்டுக. ஆதிக்கும்= முதலியவற்றுக்கும். வேள் பகை= காமஉணர்ச்சி. இலக்கு= குறிப்பொருள். நெட்டு இறால்= பெரிய தேன்கூடு. முக்களா ஐயன்= அருள்தரு முக்களாலிங்கப் பெருமானாகிய தலைவன். கைபுனை நித்திலம்= சூட்டிய முத்துமாலை. குங்குமம்= செஞ்சாந்து.

**பொழிப்புரை** : ஐம்புலன்கள் முதலியவற்றுக்கும், மன்மதன் என்மீதுகொண்ட பகையால் அம்பெய்ய வந்தபகையாகிய காமத்திற்கும் உன்ஆதரவற்ற நானும் என்நெஞ்சும் குறிப்பொருளா ? அவை என்னால் விலக்கத் தக்கனவல்ல. பெரிய தேன்கூட்டில்இருந்துவழியும்தேன், வந்துகலக்கின்ற பொருநையின்கரையில் எழுந்தருளியுள்ள அருள்தரு முக்களாலிங்கராகிய தலைவர் சூட்டிய முத்துமாலையுடன் கூடிய செஞ்சாந்துபூசிய தனங்களுடயவளே! நான் துன்புறவேண்டும் என்பதுதான் உனது திருஉள்ளக்குறிப்பா? துன்பம் களைந்தருள்.

**இலக்கணக்குறிப்பு** : தரமல்லவே - ஏகாரம் அசைநிலை. ஆதிக்கும் பகைக்கும் - எண்ணும்மைகள். தனத்தாய் - விளிவேற்றுமை. ( குங்குமத்தனத்து ஆய் எனினும் ஒக்கும் )

3. **உள்ளத் திறங்கள் உலகே உனக்(கு)இங்(கு) ஒளிப்பதென்ன**
**கள்ளத் திறங்கள் என்கன்மம் அன்றோநிட் களங்கமனப்**
**பள்ளத்(து)இறங்கும்உன் உற்பலதாரைக் கிருபாநதிநீர்**
**வெள்ளத்(து) இறங்குவ(து) எந்நாள் சனனவி டாய்கெடவே.**

**குறிப்புரை** : திறம்= குணம். கள்ளத்திறங்கள்= வஞ்சனைக் குணங்கள். கன்மமன்றோ=தீவினையால் வந்தனவல்லவா. நிட்களங்கமனம்= களங்கமில்லாத மனம். பள்ளம்= ஆழம். உற்பல தாரைக் கிருபாநதி நீலோற்பலம் போன்ற கண்களில் தோன்றும் கருணை. சனன விடாய்= பிறவித்தாகம்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! என்மனத்தின் குணங்கள்பற்றி உன்னிடம் மறைக்கஎன்ன உள்ளது. நீயறிவாய். வஞ்சனையான எண்ணங்கள் என்தீவினையால் வந்தனவல்லவோ? களங்கம் இல்லாத மனமாகிய ஆழத்தில் இறங்கித்தங்கும் உனது நீலோற்பலமலர் போன்ற கண்களில் தோன்றும்கருணைநதி தரும்நீர்ப்பெருக்கில், நான் இறங்கி என் பிறவித்தாகம் கெடத்திளைப்பது எந்நாள்? இன்றே அருள்க.

**விளக்கம்** : மனத்தின் குணம் : மனத்தின் குணம்பற்றி “ மனம் எனும் குரங்குப்பயலே “ என்பார் வடலூர் வள்ளல்பெருமான். இதன் விளக்கமாக குரங்கு, கிளைஒன்றுவிட்டு ஒன்றுபற்றுவது. ஆனால் “ அனைத்து நினைவுகளுடனும் திரிவது மனம் “ என்பார் தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள். .

மனத்தின் இயல்புகளுக்குக்காரணம் அதன் வினைப்பயனே. மனத்தால் வினையும் வினையால் மனமும் அமைவன என்பது உளவியல்

குடிக்கக் குடிக்க அடங்காதது தாகம். அதுபோல் பிறக்கப்பிறக்கஅடங்காது,வினையால்மேன்மேலும் தொடர்வது பிறப்பு என்றார்.

புறந்தூய்மை நீரால்அமைவதுபோல், அகந்தூய்மை அம்மையின் கருணைநீரால் பாசஅழுக்குகள் ஒழியப் பிறவிகெடுமாதலால் அக்கருணை வெள்ளம்தா என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : நிட்களங்க மனப்பள்ளம்,. கிருபாநதி நீர் - உருவகங்கள்.

4. **கெடுவாய் எனையும் கெடுப்பாய் மருண்டுகி லேசம்வந்தால்**
**படுவாய் உன்னோடு படுபவர் யார்வினைப் பாசநெஞ்சே**
**விடுவாய்என் அம்மை உலகாள் இடத்(து)இன்பு வேண்டில்**
**நடுவாய் அவள்பத நாவாய் சனன நடுக்கடற்கே.**

**குறிப்புரை** : நெஞ்சே என்று தொடங்குக. மருண்டு= மனம்மயங்கி. கிலேசம்= வருத்தம். படுவாய்= துன்புறுவாய். படுபவர்= துன்புறுகிறவர். வினைப்பாசம்= வினைப்பற்றாகிய அழுக்கு. நெஞ்சே விடுவாய்= வினைப்பற்றைக் கைவிடுவாய். இன்பு= திருவருள் இன்பம். பத நாவாய்= திருவடியாகிய நாவாய். சனன நடுக்கடல்= பிறவியாகியகடல்நடுவில். அவள் பதநாவாய் நடுவாய்= அன்னையின் திருவடியாகிய நாவாயில் மனத்தை நிலைக்கச்செய்வாய்

**பொழிப்புரை** : என்நெஞ்சமே! நீகெட்டதுடன் என்னையும் கெடுக்கின்றாய். கெட்டதால் துன்பம் வந்தால் துன்புறுவாய். உன்னுடன் யாரால் துன்பப்படமுடியும்! வினைப்பற்றாகிய அழுக்கைக் கைவிடு; என்தாயாகிய உலகம்மையின் அருளின்பம்வேண்டின், பிறவிக்கடல் நடுவிலுள்ள அவளது திருவடியாகிய நாவாயில் உன்மனத்தை நிலைநிறுத்துவாயாக.

**விளக்கம்** : உயிரும் உள்ளமும் பிரிக்கவியலாநிலையில் பிணைக்கப்பட்டவை. எனவேதான் உயிரைக் குறிக்கவேண்டிய பலஇடங்களில் உயிரை உள்ளமென்றே சிவஞானபோதம் குறிக்கிறது. உயிரும் உள்ளமும் பிரிக்கவியலா இணைகள் - உயிருள்ளவற்றுக்கு உள்ளமும், உள்ளமுள்ளவற்றுக்கு உயிரும் உண்டு என்றுகண்டு சோதனைகள் வாயிலாக நிறுவியவர், பிரிக்கப்படாத வங்காளத்து அறிவியல் அறிஞர் சகதீச சந்திரபோஸ்( ஜெ. சி. போஸ் ) எனவேதான் நெஞ்சே நீகெட்டதுடன் உயிராகிய என்னையும் கெடுத்தாய் என்றார்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேர தார்

என்ற திருக்குறள் கருத்து ஈற்றடிக்கண் உள்ளது.

**இலக்கணக்குறிப்பு** : கெடுவாய், கெடுப்பாய், படுவாய், விடுவாய், நடுவாய் - முன்னிலை ஒருமை வினைமுற்றுகள். பதநாவாய், சனன நடுக்கடல் - உருவகங்கள்.

5. **கடலும் தரங்கமும் போல்உல கேநின்ற கன்மமும்பாழ்**
**உடலும் தொடர்ந்த உறவும்என் சொல்கேன் உறுகோ(டு)இதழி**
**மடலும் குலைந்து மதுவூற்ற எந்தை மதிச்சடைமேல்**
**படலும் சிவந்த பதம்பாடி உன்னையும் பாடியுமே.**

**குறிப்புரை** : தரங்கம்= அலை. கன்மம்- வினைப்பயன், உடல்= பிறவி. தொடர்ந்த உறவு= கன்மம் பிறவி ஆகியவற்றுக்கிடையேயுள்ள தொடர்பு. கோடு= மரக்கிளை. இதழிமடல்= கொன்றைமலரிதழ்கள் குலைந்து= கட்டவிழ்ந்து. படலும்= தேன்பட. சிவந்தபதம்= சிவந்தஅழகு. பாடியுமே= பாடியும்கூட.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! மரக்கிளையில் உள்ளகொன்றை இதழ் கட்டவிழ, அதனால் அதன்தேன்பெருகி ஊற்ற, அத்தேனால் நிலவு செந்நிறஅழகு பெற்றதென்று உன்னைப் பாடியபோதும்; கடலும் கடல்அலையும்போல் விளங்கும் எனது கன்மமும்கன்மப் பயனும், பாழான உடம்பும் ஆகியஇவற்றுகிடையே தொடரும் உறவைப்பற்றி என்ன கூறுவேன். ( கன்மத்தால் வருவது பிறவியாதலின், கன்மத்துக்கும் பிறவிக்கும் இடையேயுள்ள உறவைக் கூறிமாளாது என்றார்.)

**விளக்கம்** : கன்மத்தால் பிறப்பும், பிறப்பால் கன்மமும் தொடர்கிறது :

உடல்செயல் கன்மம் இந்த உடல்வந்தவாறு ஏதென்னின்
விடப்படும் முன்உ டம்பின் வினை இந்த உடல்வி ளைக்கும்
தொடர்ச்சியால் ஒன்றுக்கு ஒன்று தொன்றுதொட்டு அநாதி வித்தின்
இடத்தினின் மரம்ம ரத்தின் வித்தும்வந்து இயையு மா போல் ( சித்தி. 100 )

வினையால் பிறப்பு, ஒருபிறப்பில் பலவினைகள், பலவினைகளால் பலபிறப்புகள் என்பதை; ஒருவித்து அதனால் ஒருமரம், ஒருமரத்தால் பலவித்துகள் பலவித்துகளால் பலமரங்கள் என்ற உவமகாட்டிவிளக்கினார்.

கடல் ஓயாததுபோல் கன்மங்களால் பிறவிகளும் ஓய்வதில்லை என்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

6. **பாடும் கவிக்(கு)இரங் காய்உல கேகொடும் பாவிக்குநீ**
**கூடும் புசிப்(பு)அன்றி கூட்டுவையோ தன்னைக் கொண்டுதப்பி**
**ஓடுந் தனையும் உழைத்திடுங்கால் இவ்வுயிர் அகன்றால்**
**வாடும் பிற(கு)இந்த மண்ணோ(டு) அறுதிஇம் மண்ணுடம்பே.**

**குறிப்புரை** : இரங்காய்= இரங்கியருள். கொடும்பாவிக்கு= கொடியபாவியாகிய எனக்கு. நீ கூடும் புசிப்பு= நீ தக்க கன்மநுகர்ச்சி. கூட்டுவையோ= வழங்குவாயோ- வழங்கமாட்டாய். தன்னைக் கொண்டு= அந்தக் கன்மநுகர்ச்சியை ஏற்று. தப்பி ஓடுந்தனையும்= கன்மபலன் முடியும்வரை. உழைத்திடுங்கால்= உலகில் கன்மங்கள் செய்துவாழும்போது. வாடும்= வருந்தும். மண் உடம்பு= (கன்மபலனைக்) கழுவ - அனுபவித்துத் தீர்க்கவந்த உடம்பு. மண்ணோடு அறுதி= மண்ணோடு மண்ணாகி முடியும் - ஒழியும்.

**பொழிப்புரை** : உலகம்மையே! நீ இந்தக்கொடிய பாவியாகிய எனக்கு, தக்க கன்மநுகர்ச்சியல்லாமல் கூட்டியோ குறைத்தோ கூட்டுவிக்கமாட்டாய். அக்கன்மநுகர்ச்சியை ஏற்று, கன்மபலன்முடியும்வரை நான் வாழும்போது இவ்வுயிர் உடலைவிட்டுஉயிர்நீங்குமானால், அனுபவிக்கவேண்டிய எஞ்சிய கன்மபலனை அனுபவிக்கமுடியாமல் உயிர்வருந்தும். உடம்பு மண்ணோடு மண்ணாகி முடியும்.

**விளக்கம்** : கன்மபலன் நுகர்ச்சியாவது= செய்த செயலுக்கேற்ற இன்பம் / துன்பம் அனுபவித்தல். கன்மபலனை அனுபவிக்கும் போது இடையே உயிர்உடலைவிட்டு நீங்குமானால் எஞ்சிய கன்மபலனை அனுபவிக்கமுடியாமல் உடலைப்பிரிந்த உயிர்வருந்தும். உடல் மண்ணுக்கு இரையாகும்என்றார்.

7. **மண்கொள்ளு மோஅந்த விண்கொள்ளு மோநின் மகிழ்நர்மனத்(து)**
**எண்கொள்ளு மோஇஃது ஏதோ அதிசயம் எண்ணிஎண்ணிப்**
**புண்கொள்ளும் ஓர்புன் மதியேனும் காணஇப் போ(து)இரண்டு**
**கண்கொள்ளு மோஉல கேஇன்று நீநின்ற கட்டழகே.**

**குறிப்புரை** : மண்கொள்ளுமோ அந்த விண்கொள்ளுமோ= ( உடலைப்பிரிந்த உயிர் ) மீண்டும் பிறக்குமோ, அந்த விண்ணுலகடையுமோ. நின்மகிழ்நர் மனத்து= நின்கணவராகிய சிவபிரானின் திருஉள்ளத்தால். எண்கொள்ளுமோ= எண்ணப்பெறுமோ - வீடுபேறு பெறுமோ. புண்கொள்ளும்= வருந்தும். புன்மதியேனும் காண, உலகே இன்றுநீ நின்றகட்டழகு இப்போதுகண்கொள்ளுமோ என்றுகூட்டுக. புன்மதி= அற்ப அறிவு. கண்கொள்ளுமோ= கண்கொள்ளாக்காட்சி.

**பொழிப்புரை** : உடலைப்பிரிந்த உயிர் மீண்டும் இவ்வுலகில் பிறக்குமோ, சொர்க்கம் அடையுமோ, உன்கணவராகிய சிவபிரான் உள்ளத்தில் இடம்பெற்று வீடுபேறடையுமோ அறியேன். இது வியக்கத்தக்கது. இதை எண்ணிஎண்ணி மிகவருந்தும் அற்பமதியுடையநானும்காணுமாறு தோன்றியஉன்கட்டழகுக்காட்சியை இன்றுகாண, என் இரு கண்கள் போதமாட்டா.

.**விளக்கம்** : சிவபிரான் மனத்தில் இடம்பெறுதலாவது வீடுபேறு பெறுதல் - மீண்டும் பிறாவாநிலை பெற்றுதல். புண்ணியம் செய்தஉயிர் சொர்க்கத்தையும், பாவம் செய்த உயிர் நரகத்தையும் அடைந்து முறையே இன்பத்தையும் துன்பத்தையும் நுகர்ந்தபின், இருவினை ஒப்பின்மையால், அதுபெற்றுவீடுபேறு பெற இவ்வுலகில் பிறக்கவேண்டும். இருவினை ஒப்புஅமைய வாய்ப்பளிப்பதும், அதன்மூலம் வீடுபேறு பெற வாய்ப்பளிப்பதும் இந்நிலவுலகேயாதலின் இங்குவந்து இருவினைஒப்பு அமையவாழ்ந்து வீடுபேறு பெறுவோம் என்று பிரமன் திருமால் முதல்யோர் நினைப்பதாகத் திருவாசகம்,

" புவனியில் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றோம்அவமே இந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற வாறுஎன்று நோக்கித்
திருபெருந் துறையுறைவாய் திருமாலாம்
அவன்விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்

படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்துஎமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே. " ( திருவாசகம் 377 )

இருவினை ஒப்பாவது,

" நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லல் படுவது எவன் " ( திருக்குறள் 379 )

என்றவாறு நன்மையால் இன்பமும், தீமையால் துன்பமும் கொள்ளாது இரண்டையும் சரிசமநிலையில் கருதுதல்.

**இலக்கணக்குறிப்பு** : மண்கொள்ளுமோ, விண்கொள்ளுமோ, எண்கொள்ளுமோ - ஓகாரங்கள் ஐயவோகாரங்கள். கண்கொள்ளுமோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

8. **கட்டிய செம்பட்டும் முத்தார மும்நின் கணவரைப்போய்த்**
**தெட்டிய கண்ணும் திருத்தோடும் தோளும் தெளிந்துநறாக்**
**கொட்டிய மென்மலர்க் கூந்தலும் சாந்தக் குழம்(பு)அலம்ப**
**முட்டிய கொங்கையு மாய்உலகே வந்துஎன் முன்னிற்கவே.**

**குறிப்புரை** : தெட்டிய= மாற்றிய. நறா= தேன். அலம்ப= ததும்ப.

**பொழிப்புரை** : இடையில் கட்டிய செந்நிறப்பட்டாடை, முத்துமாலை, உன்கணவராகியசிவபிரானைக் கண்டு அவரைமாற்றிய பார்வை, அழகியதோள்கள், தெளிவான தேன் கொட்டும் மென்மையான மலர்சூடிய கூந்தல், சந்தனகுழம்பு ததும்பப் பூசி,கச்சினை முட்டிய கொங்கை ஆகியவற்றுடன் எனக்கு அருட்காட்சி தந்தருள்க

**இலக்கணக்குறிப்பு** : கண்ணும் - இடவாகுபெயர்.

9. **நிற்கும் பகிரண்டம் எல்லாம் தகர்த்து நிர்த்தூளிபடப்**
**பொற்குன்ற மும்பொடி யாகநின்(று) ஆடும் புனிதர்தமை**
**விற்கும் கடைக்கண் உலகேஉன் மாயவி லாசஉண்மை**
**கற்கும் பெரியர்அல் லால்சிறி யேன்எங்ஙன் காண்பதுவே.**

**குறிப்புரை** : நிற்கும்= நிலைத்த. பகிரண்டம்= அண்டவெளி. நிர்த்தூளிபட= நாசமாக. பொற்குன்றம்= மாமேருமலை. நின்று= தொடர்ந்து. விற்கும்= அடிமையாக்கும். மாய விலாசம்= அழகிய விளையாட்டு. உண்மை = மெய்ஞ்ஞானம்.

**பொழிப்புரை** : நிலைத்த அண்டவெளி முழுவதும் உடைபட்டு அனைத்தும் நாசமாகவும், மேருமலை பொடிபடவும் தொடர்ந்து ஊழிக்கூத்தாடிய சிவபிரானை அடிமைப்படுத்தும் கடைக்கண் நோக்குடைய உலகம்மையே! உன் அழகியவிளையாட்டின் ஞானத்தை, உணர்ந்துபோற்றும் பெரியோர்க்கு அல்லாமல் சிறியவனாகிய நான் எவ்வாறு உணரமுடியும் ! உணர அருள்க.

**விளக்கம்** : உலகம்மை ஞானவடிவினள் :

" அலர்ந்தமெய்க் கருணயும் நீயும் " ( திருவாசகம் 377 )

( = அண்டமெங்கும் பரவிய ஞானக்கருணை வடிவாகிய அம்மையும் சிவமும் )

10. **காணக் கிடைத்தது நின்திருக் கோலம்என் கள்ளமனம்**
**பூணக் கிடைத்த(து)உன் பொன்மலர்த் தாள்உன்னைப் போற்றிசெய்து**
. **பேணக் கிடைத்த(து) உல(கு)எனும் பேர்பெற்ற பேறுகண்டு**
**நாணக் கிடைத்தது ஒன்(று)அம்மா அதைஎன்ன நான்சொல்வதே.**

**குறிப்புரை** : கள்ளமனம்= குற்றமுடைய மனம். நாண= அடக்கம்கொள்ள. ஒன்று= பேரின்பம்.

**பொழிப்புரை** : தாயே ! உனது தெய்விகஅழகு நான்காணக்கிடைத்தது; எனது குற்றமுள்ளமனம் பேணிக்கொள்ளும்பொருட்டு உனதுஒளிபொருந்திய மலர்த்தாள் கிடைத்தது; உன்னைபோற்றி மனத்தில் பேணிக்கொள்ளக்கிடைத்தது உலகம்மை என்றதிருப்பெயர்; நான்பெற்ற பேறுகளை எண்ணி அடக்கம் கொள்ளப்பேரின்பம் கிடைத்தது. அந்தப் பேரின்பம்பற்றி நான் சொல்லவியலாது.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி..

11. **சொல்லப் படா(து)உல கம்மேநின் பேரெழில் தோற்றம்அப்பால்**
**செல்லப் படாது திகைத்துநின் றேன்பற்றிச் சிற்றுளியால்**
**கல்லப்படாத கரும்பாறை நெஞ்சைக் கரைத்(து)இனிமேல்**
**வெல்லப் படா(து)எழு மோகாந்த காரத்தை வெல்லுவையே.**

**குறிப்புரை** : தோற்றம்= திருஉரு. அப்பால் செல்லப்படாது= தோற்றம் காண்பதை விடுத்து வேறிடம் செல்லவியலாது. சிற்றுளி= சிறிய உளியாகிய கருணை. கல்லப்படாத செதுக்கப்படாத. மோகாந்த காரம்= காமப்பேரிருள்

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! உன்திருவுருவின் பேரெழில் காட்சிபற்றிச்சொல்லவியலாது. ஆனால், அதைவிட்டுச் செல்லவியலாது திகைத்தேன் சிறியஉளியாகியஉன் கருணையால் இதுவரை செதுக்கிச் சீர்செய்யவியலாத வலிமையான பாறைபோன்ற என்மனத்தைக் கரைத்து, இதுவரை என்னால் வெல்லப்படாது இருக்கும் காமப்பேரிருளை நான் வெல்லஅருள்க.

**விளக்கம்:** சிற்றுளியால்கரைத்தலாவது; பத்திமைகொண்ட மனத்திற்கு ஊறுநேராது மனமாசினை மட்டும் பையச் செதுக்கல். காமம்; இடம், உறவுமுறை அறியாததாதலின் காமாந்தகாரம் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : பாறை நெஞ்சு - உவமத்தொகை. மோக அந்தகாரம் - உருவகம்.

12. **வெல்வாய்என் அம்மை அருளால் புலன்களை வேங்கைகண்ட**
**புல்வாய் எனஅஞ்சும் புன்மைநெஞ் சேபிறை போல்எயிற்று**
**வல்வாய் எமன்வரு மோஉல கேஎன்று வாய்திறந்து**
**சொல்வாய் விழிக்கினும் சோர்வாய் உறங்கினும் தும்மினுமே.**

**குறிப்புரை** : புலன்கள வெல்வாய் என்க. புல்வாய்= மான். வல்வாய்= கொடியசொல்பேசும்.

**பொழிப்புரை** : பிறைபோல் உட்பக்கம் வளைந்தவேங்கைப் புலியைக்கண்ட மான்போல் அஞ்சும்அற்பமான என்மனமே! அம்மையின் அருளால் ஐம்புலன்களையும் வெல்லுக. நீ விழித்திருக்கும் போதும், சோர்ந்து உறங்கிக்கொண்டிருக்கும்போதும், தும்மும்போதும் கொடிய சொற்கள் பேசும் யமன்வந்தால், உலகம்மையே என்று வாய்திறந்து அம்மையை அழைப்பாயாக.

**இலக்கணக்குறிப்பு** : புல்வாய் - காரணப்பெயர். விழிக்கினும் உறங்கினும் தும்மினும் - எண்ணும்மைகள். வேங்கைகண்ட புல்வாய், பிறைபோல் எயிற்று - உவமையணிகள்.

13. **தும்மும் கனல்முத் தலைச்சூல பாணிநெஞ்சுக் குள்வைத்துச்**
**செம்மும் புதையல் திரவிய மாய்உன் சிலம்படியை**
**விம்மும் புளகத் தனத்(து)உல கேஎன் மிட(று)உளைந்து**
**கம்மும் படிஇத் தனைநாள் கதறியும் கண்டிலனே.**

**குறிப்புரை** : தும்மும்..........சூலபாணி, புதையல் திரவியமாய் உன்சிலம்படியை நெஞ்சுக்குள் வைத்துச் செம்மும் என்க கனல்தும்மும்= நெருப்பினைக் கக்கும். சூலபாணி= கையில் சூலம் ஏந்திய சிவபிரான். புதையல் திரவியமாய்= புதைத்துவைத்த செல்வமாக. செம்மும்= இறுக மூடிவைக்கும். புளகம்= பூரிப்பு. உளைந்து= வருந்தி.

**பொழிப்புரை** : நெருப்புக் கக்கும் முத்தலைச் சூலம் ஏந்திய சிவபிரான், புதையல் செல்வம்போல் உனது சிலம்பணிந்த திருவடியைத் தன்நெஞ்சில்வைத்து இறுகமூடிவைப்பான். பருத்துப் பூரித்த தனங்களுடைய அருள்தரு உலகம்மையே! நான் என் தொண்டைவருந்திக் கம்முமாறு இத்தனைநாள் உன்னைக்காணக் கதறியும் காணேன். காணவந்தருள்க .

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

14. **கண்டத்தி லேஅன்று சற்றே கருத்த கருப்பன்நிலாத்**
**துண்டத்தி லேசெஞ் சுடர்காட்டு பாதத் துணைதுணையா**
**அண்டத்தி லேகண்ட(து) எல்லாம்என் அம்மை அடியர்தங்கள்**
**பிண்டத்தி லேகண் டிருப்பார்கற் பாந்தரம் பின்னிடவே.**

**குறிப்புரை** : கண்டத்திலே ..................கருப்பன்= கழுத்தில் சிறிதுகருநிறம் பெற்ற சிவபிரான். நிலாத்துண்டம்= பிறை. செஞ்சுடர்= சிவந்த சூரியன். காட்டு பாதம்= வழங்கும்கிரணம். துணை துணையா= இரண்டையும் துணையாகக் கொண்டு. அண்டத்திலே கண்டதுஎல்லாம்=உலகில்காணப்படும்அனைத்தையும். பிண்டத்திலே= உடலிலே. கற்பாந்தரம் பின்னிட= கற்பகாலத்துக்குப் பிறகும்.

**பொழிப்புரை** : தன்கழுத்தில் சிறிதளவு கருமைநிறமுடைய சிவபிரானின் பிறை, சூரியன் ஆகிய இரண்டும் தரும் ஒளியின்துணையுடன் இவ்வுலகில் கண்டஅனைத்தையும், என்உலகம்மையின்அடியார்கள் தமது உடம்பில் - உள்ளத்தில் கற்பகாலத்துக்குப் பிறகும் காண்பர்.

**இலக்கணக்குறிப்பு** : பிண்டம் - இடவாகுபெயர்.

15. **பின்னிட்ட கொந்தள பாரத்தின் மாலைப் பிரசம்உண்டு**
**தென்னிட்ட வண்டின் சிறைக்காற்று மூர்ச்சனை தீர்க்கவந்து**
**முன்னிட்டு நின்(று)என் உயிர்விடுங் கால்பத மும்தருவாய்**
**என்இட்டம் இங்(கு)இ(து) உலகே உனக்(கு)இட்டம் எப்படியே.**

**குறிப்புரை** : பின்னிட்ட கொந்தள பாரம்= பின்னிய பாரமான கூந்தல். பிரசம்= தேன். தென்னிட்ட= இனிமையாகப் பாடிய. வண்டின் சிறைக்காற்றின்= வண்டின் சிறகுவீசும் காற்றுப்போன்ற. மூர்ச்சை தீர்க்க= நினைவுதவறுவதை ஒழிக்க. முன்னிட்டு வந்து நின்று= முதலிலேயே வந்திருந்து பதம்= திருவடி. இட்டம்= விருப்பம்

**பொழிப்புரை** : பின்னிய பாரமான கூந்தலில் சூடிய மலர்மாலையின் தேன்பருகி, இனிமையாகப் பாடும் வண்டின் சிறகுவீசும் மென்மையான காற்றுப்போல் மெள்ளமெள்ள நினைவு தவறுவதை நீக்கும்பொருட்டு, முதலிலேயே வந்திருந்து நான் உயிர்விடும்போது நீ உன்திருவடியும் தா. என்விருப்பம் இதுவாகும். உன்விருப்பம் எப்படி ?

**இலக்கணக்குறிப்பு** : எப்படியே - ஏகாரம் அசைநிலை. இச்செய்யுள் உவமையணி.

16. **எப்படி நீதுணை செய்குவை யோஅறி யேன்பிழைத்த(து)**
**அப்படி யேன்இச் சனனத்தில் தள்ளத் தக்கதன்றால்**
**அப்படி ஏழு பிறப்பினும் சூழும்அல் லால்பகட்டுக்**
**கப்(பு)அடி ஊர்திக்(கு) என்மேலே தினமும் கடுந்தரவே.**

**குறிப்புரை** : எப்படி= எவ்வாறு. இச்சனனத்தில்அப்பு அடியேன் பிழைத்தது தள்ளாத் தக்கதன்று= இப்பிறப்பில் உடம்பால் நான் செய்தபிழைகள் ஒதுக்கிவிடக்கூடியனவல்ல. அப்படி= அவ்வாறு. சூழும் அல்லால்= சூழ்வது தவிர. கப்புஅடிப் பகட்டு ஊர்தி= பிளந்தகுளம்புடைய எருமையூர்தியுடைய யமன். கடுந்தரவு= கடுங்சினம்.

**பொழிப்புரை :** தாயே! எவ்வாறு உதவிசெய்வாய் என்பதை அறியேன். இப்பிறவியில் உடம்பால் நான்செய்தபிழைகள் ஒதுக்கத்தக்கனவல்ல. இவ்வகையில் ஏழுபிறப்பிலும் பிழைகள் சூழும்.இதுதவிர, பிளந்தகுளம்புகளுடைய எருமையை ஊர்தியாக உடைய யமனும் என்மேல் நாடோறும் சினங்கொள்வான். - எனவே இப்பிறவிலேயே அருள்க.

17. **தரமோசென்(று) உண்டி பொருட்டால் பிறர்வையம் தாழ்ந்துமண்ணோ**
**மரமோஇங்(கு) எப்படிக் கேட்ப(து)அம்மா இந்த வாழ்க்கைஎன்ன**
**திரமோபுன் சன்மம் இனிப்போதும் நீவைத் திருந்த(து)இக**
**பரமோஉன் பொற்பதம் தாஉல கேபடும் பா(டு)அறிந்தே.**

**குறிப்புரை :** தரம்= தக்கது. உண்டி= உணவு. பிறர் வையம்= பிறர்மண் - பிறர்வீடு. வையம் சென்று தாழ்ந்து என்க. மரமோ - மறமோ = வெற்றியால் பெற்ற பொருளோ. திரமோ= உறுதியானதா. இகபரமோ= இம்மை மறுமை. படும்பாடு= அனுபவிக்கும் துன்பம்.

**பொழிப்புரை :** உலகம்மையே! உணவின்பொருட்டுப்பிறர்வீடு சென்று வணங்கி, நிலமோ, அவரது வெற்றியால் பெற்ற பொருளோ எப்படிக்கேட்பது? இது தக்கதன்று - இழிந்தது. தாயே இந்தவாழ்க்கை நிலையானதன்று; இந்த அற்பப் பிறப்புபோதும் - வேண்டாம். நீ என்பொருட்டு வைத்திருந்தது இவ்வுலகமா? வீட்டுலகமா? நான்படும்துன்பம் அறிந்து உனது பொன்னான திருவடிகளை அருள்க.

. **விளக்கம் :** இரத்தல் இழிந்தது :

. " ஈஎன இரத்தல் இழிந்தன்று " ( புறம் 204 )

வாழ்க்கை நிலையானதன்று :

" நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின் ( திருக்குறள் 334 )

" நில்லாத உலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேல் என்று அறத்துறந்து ( பெரியபுராணம்.1307 )

**இலக்கணக்குறிப்பு :** மரமோ - எதுகை நோக்கி மறம், மரமானது செய்யுள்விகாரம். மண்ணோ மரமோ திரமோ - ஓகாரங்கள் எதிர்மறைப்பொருளன.

18. **அறியாதது ஒன்றை அறிந்துஅனு பூதிவந்(து) ஆனந்தமாய்ப்**
**பிறியாது நின்றுப்ர பஞ்சம்எல் லாம்தள்ளிப் பின்னைஒன்றும்**
**குறியா(து) இருந்(து)உனை காணா விடில்பிழைக் கும்படிக்(கு)ஓர்**
**நெறியாதும் கண்ட(து) உண்டோஉல கேசொல்லு நீஎனக்கே.**

**குறிப்புரை:** அறியாதது ஒன்றை= இதுவரை அறியாத ஒப்பற்ற திருவருளை. அனுபூதி வந்து= அருளனுபவ அறிவு பெற்று. பிறியாது - பிரியாது= அந்த அனுபவத்தைப் பிரியாது. தள்ளி= ஒதுக்கி. குறியாது= விரும்பாமல். பிழைக்கும்படிக்கு= ஈடேறுவதற்கு.

**பொழிப்புரை :** உலகம்மையே ! இதுவரை அறியாதுஇருந்த ஒப்பற்ற திருவருளை அறிந்து, அதனால் அருளனுபவம் பெற்று, இன்பமுடன் உன்னைப்பிரியாது இருந்து, உலகைஒதுக்கி அருளனுபவம் தவிர வேறொன்றையும் விரும்பாமல் வாழ்ந்தும் நான் உன்னைக் காணவியலாதபோது, அருளனுபவத்தில் வாழ்வதற்கு வேறுவழி ஏதும் உண்டா? இல்லை. உண்டேல் நீ எனக்குச் சொல்லியருள்க. .

**இலக்கணக்குறிப்பு :** உண்டோ - எதிர்மறை ஓகாரம்.

19. **எனக்கே சகாஉனை அன்றிஉண் டோஎன்(று) இருள்எறிக்கும்**
**கனகேச பாரக் கரும்பைநெஞ் சேஒருக் கால்நினைத்தால்**
**தனக்கே சரீரம் பகிர்ந்(து)ஆளை வாழ்வித்த தாய்எளிவந்(து)**
**உனக்கே சகாயம் புரிவாள்ஓர் சிற்பதம் உன்பதமே.**

**குறிப்புரை** : சகா= நண்பன். இருள் எறிக்கும்= கருமை ஒளிரும். கன கேசபாரக் கரும்பு= அடர்ந்ததும் பாரமானதுமான கூந்தலுடய அருள்தரு உலகம்மை. தனக்கே சரீரம்பகிர்ந்து= தன்னுடம்பை கணவனுடன் பங்கிட்டுக்கொண்டு. ஆளை வாழ்வித்த= தன்னை ஆள்கிறவனை நஞ்சின் கொடுமை தீர்த்து வாழச்செய்த. சகாயம்= நன்மை. சிற்பதம்= ஞானமாகிய திருவடி. உன்பதம்= உனக்குக்காவல் ஆகும்.

**பொழிப்புரை** : கருமை ஒளிரும் கனத்தகூந்தலுடைய கரும்பாகிய அம்மையை நினைத்தால் போதும். அவளைத்தவிர வேறு நண்பர் இல்லை. அவளை ஒருமுறைநினைத்தால் , தன்னுடம்பைக் கணவனுடன் பகிர்ந்துகொண்டு அவனை நஞ்சிலிருந்து மீட்டு வாழ்வித்த அத்தாயானவள் எளிதில் வந்து உனக்கு நன்மைகள் செய்வாள். அவளது ஞானத்திருவடி உனக்குக்காவல் ஆகும்.

20. **பதம்என்ற தாமரைப் பூவுக்குள் ஆறுபதச் சுரும்பாய்**
**இதம்என்று போயிருந் தாய்இலை யேமுடை யாக்கைஅற்**
**புதம்என்று தாய்உல கைப்பணி யா(து)என்ன புத்திஇதைச்**
**சதம்என்று நீகெடுத் தாய்மன மேஎனைச் சந்ததமே.**

**குறிப்புரை** : பதம்= திருவடி. ஆருபதச் சுரும்பு= ஆறுகால் வண்டு. இதம்= நன்மை. முடை= தீயநாற்றம். இதை= இவ்வுடம்பை. சதம்= நிலையானது. சந்ததம்= எப்போதும்.

**பொழிப்புரை** : மனமே! உலகம்மையின் திருவடியாகிய தாமரை மலருக்குள் தேன்பருகி இருக்கும் ஆறுகால் வண்டாக் இருப்பதுதான் நன்மைஎன்று சென்று நீ இருக்கவில்லை. தீயநாற்றம்பொருந்திய இந்த உடம்பு அற்புதமானது என்று எண்ணிக்கொண்டு உலகம்மையாகிய உன்தாயைப் பணியாத உனது அறிவென்ன அறிவு? இவ்வுடம்பு நிலையானது என்றுசொல்லி என்னை எப்போதும் நீ கெடுத்தாய்.

**இலக்கணக்குறிப்பு** : பதம் என்ற தாமரைபூ,. மனம் சுரும்பு - உருவகங்கள். இலையே, எனையே - இடைக்குறைகள்

21. **சந்தன பாரத் தனம்பிதிர் ஓடத் தமிழ்மறைச்சம்**
**பந்தன் அவாஅறப் பால்கொடுத் தாய்விருப் பாய்நிகள**
**பெந்தன மாம்இச் சடம்சுடு காட்டுப் பெருநெருப்புக்(கு)**
**இந்தனம் ஆகத் தமியேனும் நெஞ்சும் இருந்தனமே.**

**குறிப்புரை** : பிதிர்ஓட பால்துளி பெருக. அவா அற= பசியால்வந்த பால்பருகும் ஆசைதீர. நிகள பெந்தனம்= யானைச்சங்கிலியால் கட்டப்பெற்ற. சடம்= உடம்பு. இந்தனம்= விறகு.

**பொழிப்புரை** : சந்தனம் பூசப்பெற்ற கனத்த முலையிலிருந்து பால்பெருக, அதனைத் தமிழ்மறை அருளிய திருஞானசம்பந்தருக்கு, அவரது பசிகாரணமாகப் பால்குடிக்கவேண்டும் என்ற ஆசைதீர விருப்பத்தோடு தந்தாய். யானைச்சங்கிலியால் கட்டப்பெற்றதுபோன்று உயிருடன் கட்டப்பெற்ற இந்த உடம்பு உயிர்பிரிய, சுடுகாட்டுப் பெருநெருப்புக்கு விறகாக நானும் என்நெஞ்சும் இருக்கிறோம்.
( திருஞானசம்பந்தர் அழுததும் பால்சுரந்தளித்த நீ, உன்அருளுக்காக ஏங்கும் எனக்கு அருளவில்லையே! அருள்க என்பது குறிப்பு )

**விளக்கம்** : திருஞானசம்பந்தர்க்கு திருமுலைப்பால் அருளியது :

" எண்ணரிய சிவஞானது இன்னமுதம் குழைத்தருளி
"உண்அடிசில்" எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையில்பொற் கிண்ணம்அளித்து
அண்ணலைஅங்கு அழுகைதீர்த்து அங்கணனார் அருள்புரிந்தார் ' ( பெரியபுரா. 1971 )

உயிரைப்பிரியாதது நெஞ்சு - உள்ளம் என்பதனால் "தமியேனும் நெஞ்சும்" என்றார்.

22. **தனத்(து)ஆசை உண்டதுநின் பூசனை எண்ணிச் சற்சனங்கள்**
**இனத்(து)ஆசை உண்ட(து)உனக்(கு) அன்புவேண்டி ரகசியஉற்**
**பனத்(து)ஆசை உண்டது சிற்பதம் காமித்த பாதகனேன்**
**மனத்(து)ஆசை இவ்வள(வு) அம்மா உல(கு)உண்ட மால்தங்கையே.**

**குறிப்புரை :** தனத்துஆசை= பொன்னாசை. நின்பூசனை உண்டது= உன்னைவழிபட ஒழிந்தது. உன் பூசனை எண்ணி= உன்னை வழிபடநினைத்து. சற்சனங்கள் இனம்= அடியார்கூட்டம். உண்டது= உண்டானது. ரகசிய உற்பனம்= இரகசியப்பொருளுடைய உண்மை - ஓங்காரம். சிற்பதம் காமித்த= ஞானத்திருவடியை விரும்பிய. உலகு உண்டமால்= உலகைத்தன் வயிற்றில் அடக்கிய திருமால்.

**பொழிப்புரை :** உன்னைவழிபட்டதால் பொன்னாசை ஒழிந்தது. அதனை நினைத்து அடியார் கூட்டத்தின் மேல் ஆசை உண்டானது. உன்மேல் அன்பினை வேண்டி இரகசியப்பொருளுடைய ஓங்காரத்தின் மேல் ஆசைஉண்டானது. உனது ஞானமாகிய திருவடியை விரும்பிய பாதகனாகிய என்மனத்தின் ஆசை இத்துணைப்பெரியது ஆகும். அருள்க.

**விளக்கம் :** அடியார் கூட்டத்தின் சிறப்பு :

" ..............................................................................கருணையொடு
நிலையில் பொருளும் நிலையியல் பொருளும்
உலையா மரபின் உளங்கொளப் படுத்திப்
புல்லறிவு அகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம னோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மை செய்யத் திருஉளம் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே. ( சிதம்பரமும்மணிக். 11)

( நிலையில் பொருள்= நிலையில்லாதன. நிலையியல் பொருள்= நிலையாக இயங்கும் பதி,பசு,பாசம் )

" அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே " ( தாயுமான. பராபரக்.கண்ணி )

திருவடிஞானத்தின் சிறப்பு :

" திருவடி ஞானம் சிவம்ஆக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே. " ( திருமந்திரம். 1598 )

ஓங்காரத்து இரகசியப்பொருள்:

ஓங்காரம் அகர உகர மகரத்தின் கூட்டு. இவைமூன்றும்ஆகிய படைத்தல் காத்தல் அருளல் ஆகியமூன்றையும் ஒருசேரத்தானே இயற்றும் சிவபரம்பொருளைக்குறிப்பது ஓங்காரம்.

23. **தங்கம் குழைத்த முலைத்தாளம் ஒற்றித் தனிக்குழையான்**
**அங்கம் குழைத்தஎன் அம்மாசற் றேனும் அகம்குழையாய்**
**பங்கம் குழைத்த புனல்போல் கலங்கிப் பரந்து திரிந்து**
**எங்கெங்(கு) உழைத்து வளர்ப்ப(து)எண் சாண்குழி இம்மட்டுமே.**

**குறிப்புரை :** தங்கம் குழைத்த= அழகுவாய்ந்த. தாளம்முலை= தாளங்கள் போன்ற முலைகள். ஒற்றி= சேர்த்து. தனிக்குழையான்= ஒற்றைக்குழையணிந்த சிவிபிரான். அங்கம் குழைத்த= உடம்பினைக் குழையச்செய்த. குழையாய்= மனமிளகமாட்டாயா. பங்கம்= சேறு. பரந்து= பலவாறு எண்ணி. எண்சாண்குழி= அவரவர் கையால்எட்டுச்சாணுடைய உடம்பு வயிறு. இம்மட்டு= இதுவரை.

**பொழிப்புரை :** அழகுடைய இருதாளங்கள் ஒத்த முலைகளால் ஒற்றி, ஒற்றைக்குழையுடைய சிவபிரான் உடம்பைக்குழைத்த தாயே! சேற்றில் குழைத்தநீர்போல் மனம் கலங்கிப் பலவாறு எண்ணியும் திரிந்தும்பலவாறு உழைத்தும் இந்த எண்சாணுடம்பின் குழியாகிய வயிற்றை இதுவரை நான் வளர்த்துக்கொண்டிருக்கிறேன்; என்மேல் சிறிதளவாவது மனமிரங்கு.

**விளக்கம்** : இடதுபாகம் அம்மையுடையது. வலதே இவனது ஆதலின் " தனிக்குழையான்" என்றார்

. **இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

24. **மட்டுண்ட(து) என்(று)எண்ண வேண்டாம் பிறர்தலை வாயிலிற்போய்த்**
**தட்டுண்(டு) அலைந்து தடுமாறித் தீவினைச் சங்கிலியால்**
**கட்டுண்ட(து) என்னசொல் வேன்உலகே ஒருக்காலும் மெய்த்தோர்க்(கு)**
**இட்(டு)உண்ட(து) இல்லை ஏற்(று)உண்டு நான்பட்ட(து) இன்னம்உண்டே.**

**குறிப்புரை** : மட்டுண்டது= எல்லையுடையது. தலைவாயில்= வீட்டுவாசல். தட்டுண்டு= குற்றப்பட்டு. ஒருக்காலும்= ஒருதடவைகூட. மெய்த்தோர்= புனிதர். ஏற்று= பிச்சைபெற்று. இன்னமுண்டு= மிகவுமுண்டு.

**பொழிப்புரை** : அருள்தருஉலகம்மையே நான் பாவமென்கிற சங்கிலியால் கட்டப்பட்டு, பிறர்வீட்டு வாசலுக்குச்சென்று யாசித்ததால் குற்றப்பட்டு, அலைந்து , தடுமாறியதை என்னவென்று சொல்வேன். ஒருமுறைகூடப் புனிதர்க்கு உணவிட்டு உண்டதில்லை; ஆனால் யாசித்துஉண்டதால் பட்டதுன்பம் இன்னும் மிகவும் உண்டு. உன்னருளை யாசிக்கின்றேன்; அருள்க.

**விளக்கம்** : " இனைத்துணைத்து என்பது ஒன்றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்

என்பது தமிழ்மறையாதலின் :" மெய்த்தோர்க்கு இடுதல் " சிறப்பினைக் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : தட்டுண்டு அலைந்து தடுமாறி - எண்ணும்மைத்தொகைகள். தீவினைச்சங்கிலி - உருவகம். இல்லை - இருதிணை ஐம்பால் மூவிடக்குறிப்பு வினைமுற்று.

25. **இன்னமும் பராமுகம் ஏன்அடி யார்க்கும் எனக்கும்என்ன**
**பின்னம் பராபரித் தால்பிழை யோமனப் பேய்க்(கு)இசையப்**
**பொன்அம் பராபரை நல்குமென் றேசில புத்திசொன்னேன்**
**முன்நம்பர் ஆடப் படித்தசங் கீத மொழிக்கரும்பே.**

**குறிப்புரை** : பராமுகம் = கவனிக்காதது - அருளாதது. பின்னம்= வேறுபாடு. இசைய= தக்கவாறு. பொன் அம் பராபரை= சிறந்த அழகிய பார்வதிதேவியாகிய நீ. நம்பர்= சிவபிரான். ஆட= நடனமாட. படித்த சங்கீதமோழி= பாடிய இனிய சொற்கள்.

**பொழிப்புரை** : முன்னொருகாலத்தில் சிவபிரான் நடனமாட அதற்குஏற்ப இனிதாகப்பாடிய சொற்கள் பேசும் கரும்பு ஒத்தவளே! இன்னமும் எனக்கு அருளாதது ஏன்? நீ அருளும் அடியார்க்கும் எனக்கும் என்ன வேறுபாடு? எனக்கு அருள்புரிந்தால் அதுபிழையாகுமா? சிறந்தஅழகிய பார்வதிதேவியாகிய நீ அருள்வாய் என்று என்மனமாகிய பேய்க்குச் சிலபுத்தி கூறினேன். அருள்க.

**விளக்கம்** : பேய்ஆட்டப்பலர் ஆடுவதுபோல், மனம்ஆட்டப்பலர் ஆடுவதால் மனத்தைப்பேய் என்றார்

**இலக்கணக்குறிப்பு** : மனப்பேய் - உருவகம்.

26. **கரும்பே எனும்சொல் உலகேஎன் விண்ணப்பம் கள்ளரும்பே**
**யரும்போல்வன் என்சொல் மொழிவதன் றேகுறிப் பால்இரக்கம்**
**வரும்போல் இருந்ததும் வாரா(து) எனவும் மதிமருண்டேன்**
**இரும்போ இரும்பல்ல வோஅறி யேனுன் இதயத்தையே.**

**குறிப்புரை** : கள்ளரும் பேயரும் போல்= திருடனையும் பேய்பிடித்தவனையும் போல. என்சொல் மொழிவதன்றே= நான் சொல்லமாட்டேன். குறிப்பால்= உன் சிறப்பியல்பால். வரும்போல் இருந்ததும்= அருள்கிடைக்கும் என்றும். வாராது எனவும் = என்னியல்பு காரணமாக அருள்கிடைக்காது என்றும். மதிமருண்டேன்= அறிவுதடுமாறினேன்.

**பொழிப்புரை** : கரும்பு என்னுமாறு இன்சொல் பேசும் உலகம்மையே! என் வேண்டுகோள் ஒன்றுளது. கள்வரைப்போல் பொய்யும், பேய்பிடித்தவரைப்போல் கடுஞ்சொல்லும் அல்ல என்சொல். உன் சிறப்பியல்பால் என்மேல் இரங்கி அருள்புரிவதுபோல் நீ இருந்ததையும், என்இயல்புகாரணமாக எனக்கு நீ அருள்புரியமாட்டாய் என்பதையும் நினைக்கின்றேன். நீஅருளமாட்டாய் என்பதால் உன்இதயம் இரும்போ! அருள்வாய் என்பதால் உன்னிதயம் இரும்பல்லவோ! என்று எண்ணித்தடுமாறுகிறேன். அருள்க

**இலக்கணக்குறிப்பு** : இரக்கம் வரும்போல்..............................................அறியேன். - எதிர்நிரல்நிறையணி.

27. **இதயத்(து) எறித்த இருள்மாற்றி நின்அருள் இன்(று)இரவி**
**உதயத்(து எறித்த வெயிலொக்கு மேநின்று சூழ்அறுகால்**
**புதயத் தெறித்த மதுக்கொன்றை யார்தம் புரிசடைக்கா(டு)**
**அதயத் தெறித்த பதத்தால் அலைக்கும் அரும்பிடியே.**

**குறிப்புரை** : எறித்த= பரந்த. மாற்றி= போக்கி. இரவி உதயத்து எறித்த வெயில்= உதயநேரச்சூரியன் பரப்பிய ஒளி. நின்று= மொய்த்து. அறுகால் புதயத் தெறித்த மது= வண்டுகள் மூழ்க அதனால் சிந்தியதேன். புரிசடைக்காடு= நீண்ட சடையாகிய காடு. அதய= நீங்கி. தெறித்த பதத்தால்= சிந்திய திருவடியால். அலைக்கும்= வருத்தும். அரும்பிடியே= மேன்மைபொருந்திய பெண்யானை ஒத்தவளே.

**பொழிப்புரை** : வண்டுகள் சூழ்ந்துமொய்த்துத் தமதுஆறுகால்களால் சிந்தும்கொன்றைமலர்த்தேன், மலரைநீங்கி, தேனுடைய கொன்றை மலர்சூடிய நீண்ட சடையாகியகாட்டில் தெறிக்குமாறு சிவபிரானைத் தன்திருவடியால் வருத்தும் மேன்மைபொருந்திய பெண்யானை ஒத்தவளே! இன்று எனது இதயத்தில் பரவியுள்ள ஆணவஇருள் போக்கிய உனதுஅருள், விடியற்காலையில் எழும் ஞாயிற்றொளி ஒக்கும்.

**விளக்கம்** : திருவடியால் வருத்துதலாவது உதைத்தல். இதனால் ஊடற்காலத்து நிகழ்வு கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

28. **பிடிபட்ட தன்(று)உன் சொரூபத்தி யானம் பிறந்துபிறந்(து)**
**அடிபட்ட சன்மம்எந் நாள்படு மோநின்(று) எதிர்ப்படும்அவ்**
**இடிபட்ட வெவ்அர(வு) என்னநொந் தேன்உல கேஎனக்(கு)இப்**
**இப்படிபட்ட துன்பம் இனிப்போதும் நீமுகம் பார்த்தருளே.**

**குறிப்புரை** : பிடிபட்டதன்று= அமைந்திலது. சொரூபத் தியானம்= அழகுவடிவை மனத்தில் நிறுத்துதல். அடிபட்ட= துன்புற்ற. படுமோ= ஒழியுமோ. எதிர்ப்படும்= கேட்ட.

**பொழிப்புரை** : உலகம்மையே! உனது அழகிய திருவடிவை என்மனத்தில் நிறுத்தித் தியனிக்க இயலவில்லை. பிறந்து பிறந்து துன்பப்படும் பிறவி என்று ஒழியும்! உன்எதிர்நின்றும், இடிஒலிகேட்ட நாகம்போல் மனம் துன்புற்றேன். எனக்கு இத்தகைய துன்பம் இனிவேண்டாம்! உன்கடைக்கண்நோக்கருள்க.

**விளக்கம்** : தியானத்தை " உயிரா வணம்இருந்து உற்றுநோக்கி
உள்ளக் கிழியின் உருஎழுதி
உயிரா வணம்செய்திட்டு உன்கைத்தந்தால் "( திருமு. 6. திருவாரூர் )
என்பார் அப்பரடிகள்.

**இலக்கணக்குறிப்பு** : பிறந்து பிறந்து - அடுக்குத்தொடர். இச்செய்யுள் உவமையணி.

29. **அருளுக்குத் தென்மலைச் சந்தனச் சாரல் அகண்டிதசிற்**
**பொருளுக்குச் சிங்க புரத்(து)உல காள்உக்குப் பூங்குழலின்**
**சுருளுக்குப் பைம்புயல் தோற்கநின் றாளுக்குத் தொண்டுபட்டும்**
**இருளுக்குச் சிந்தை இடைப்படுமேல் உண்மை என்படுமே.**

**குறிப்புரை** : அருளுக்கு= அருள்பெறுவதற்குத்தக்கது. தென்மலை= பொதிகைமலை. அகண்டித சிற்பொருள்= முழுமையான ஞானப்பொருள். சிங்கபுரம்= விக்ரமசிங்கபுரம். உக்கு= நெளிபட்டு தொண்டு பட்டும்= அடிமைப் பட்டும் கூட. இருள்= ஆணவம். இடைப்படுதல்= அடிமைப்படுதல். உண்மை என்படும்= ஞானம் எவ்வாறு தோன்றும்.

**பொழிப்புரை** : திருவருள்பெறஏற்றது பொதிகைமலைச் சாரலாகும். முழுமையான ஞானப்பொருளாம் சிவனருள் நாம்பெற ஏற்றவள் விக்ரமசிங்கபுரத்து அருள்தருஉலகம்மை. வளமான கார்மேகம் தோற்கவுள்ள மலர்சூடியதும் நெளிபட்டதும் ஆன கூந்தலுடைய அவளுக்கு நான்அடிமைப்பட்டும்கூட, மனம்ஆணவத்திற்கு அடிமைப்பட்டால் என்மனத்தில் ஞானம் எவ்வாறு தோன்றும்!

**விளக்கம்** : அடிமைப்படுதல் என்பது மீளமனமில்லா நிலைகுறித்தது.

**இலக்கணக்குறிப்பு** : தொண்டுபட்டும் - உம்மை உயர்வு சிறப்பும்மை.

30. **படுக்கின்ற கண்ணியில் பட்(டு)ஈடு பட்ட பறவையைப்போல்**
**எடுக்கின்ற சன்மத் திடைப்பட்டு வீணில் இகபரமும்**
**கெடுக்கின்ற கன்மம் கெடுப்ப(து)என் றோஅன்பர் கேட்டதெல்லாம்**
**கொடுக்கின்ற கற்பகக் கொம்பே அசல குலவல்லியே.**

**குறிப்புரை** : படுக்கின்ற= தன்பால் வீழ்த்துகிற. கண்ணி= வலை. பட்டு= அகப்பட்டு. ஈடுபட்ட= விரும்புகிற. இகபரம்= இம்மை மறுமை. கன்மம் கெடுப்பது= கன்மபலனை ஒழிப்பது. என்றோ= எந்நாளில். அசலகுல வல்லியே= இமயமலைக்கொடியே - பார்வதிதேவியே.

**பொழிப்புரை** : உன்அடியவர் கேட்ட வரங்களைஎல்லாம் அருள்கிற கற்பகமரமே! இமயக்கொடியாகிய பார்வதிதேவியே! தன்பால் வீழ்த்துகிற வலையில் அகப்பட்ட பறவையைப்போல், நான் எடுக்கின்ற பிறவிகளில் அகப்படச்செய்து, அதையே விரும்பி, வீணே இம்மை மறுமைவாழ்வைக் கெடுக்கும் என்வினைப்பயனை நீ அழிப்பது எந்நாளில்? இப்போதே என்வினைப்பயனை - ஊழை அழித்தருள்.

**இலக்கணக்குறிப்பு** ; இகபரம் - உம்மைத்தொகை. என்றோ - ஓகாரம் வினாப்பொருளது. கற்பகக்கொம்பு உருவகம். இச்செய்யுள் கலவையணி.

31. **குலவல்லி மேனை குமாரத்தி மூரல் குறுமுளைநித்**
**திலவல்லி சூடகச் செங்காந்தள் ஓதுபைந் தேன்கமழ்உற்**
**பலவல்லி தாமரைப் பூவல்லி மெல்லப் படகன்றுதாள்**
**நிலவல்லி சூட மலையாச லப்பக்கல் நின்றபொன்னே.**

**குறிப்புரை** : குலவல்லி மேனை= குலக்கொடியாகிய மேனை. மூரல் குறுமுளை நித்திலவல்லி= பற்கள் மூங்கில் முளையை முத்துகளை ஒத்தகொடி. சூடகச் செங்காதள்=வளையணிந்த செங்காந்தள்கை. ஓது= புகழப்பெறும். பைந்தேன் கமழ் உற்பல வல்லி= வளமான தேன்மணக்கும் கருங்குவளைமலரினை ஒத்த கொடிபோன்றவள். தாமரைப்பூஅல்லிபட= தாமரைமலரின் பூந்தாதுபட. கன்றுதாள்= வாடும்திருவடி. நிலவல்லி = நிலமகளாகிய கொடி. சூட= தாங்க. மலையாசலம்= பொதிகைமலை..

**பொழிப்புரை** : மூங்கில் முளையையும் முத்துகளையும் ஒத்த பற்களுடையவளும், வளையல் அணிந்த செங்காந்தள்மலரொத்த கையினளும், புகழப்பெறும் வளமானதேன் மணக்கும் கருங்குவளை மலர் ஒத்தவளும், குலக்கொடியாகிய மேனையின் மகளுமாகிய அருள்தரு உலகம்மையின், தாமரை மலரின் பூந்தாது பட்டதும்வாடும் திருவடியுடைய பொன்போன்றவள், நிலமகள் தாங்கப் பொதிகைமலைப்பக்கம் - விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளினாள்..

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் (மூரல் குறுமுலை நித்திலம்) பல்பொருள் உவமையணி,+ .சொல்பின்வரு நிலை

32. **பொன்ஆ சையும்மடப் பூவையர் ஆசையும் போலநிலத்(து)**
**இன்ஆசை யும்எனக்(கு) இன்னாசெய் யும்இதற்(கு) ஏதுசெய்வேன்**
**உன்ஆசை மேற்கொண்டு வாழ்முக் களாவன யோகிஎன்போன்**
**தன்ஆசை நோய்க்கு மருந்தேகல் யாண சவுந்தரியே.**

**குறிப்புரை** : மடப்பூவையர்= இளமகளிர். இன்னா= துன்பம். முக்களா வனயோகி= முக்களாவனத்து யோகியாகி அருள்தரு கல்யாணசுந்தரர். ஆசை நோய்= ஐந்தொழில் புரியும் விருப்பமாகிய நோய். மருந்து= தீர்ப்பவள்.

**பொழிப்புரை** : உன்மேல் ஆசைகொண்டு வாழும் அருள்தரு முக்களாலிங்கராகிய யோகியின் ஐந்தொழில்புரியும் ஆசையாகிய நோய்தீர்க்கும் மருந்தாகவிளங்கும் அருள்தரு கல்யாணசவுந்தரியாகிய உலகம்மையே! பொன்னாசை, இளைய மகளிர்மேல்கொள்ளும் பெண்ணாசை, இவைபோல் கொள்ளும் மண்ணாசை ஆகியன எனக்குத்துன்பம் செய்கின்றன! இத்துன்பம் தீர்க்க என்னசெய்வேன்! அருள்க.

**விளக்கம்** : சிவபிரான் யோகியாவான் :

“ நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றானை ) ( திருமு 6 )
“ மங்கையோடு இருந்தே யோகுசெய்வானை “ ( திருவிசைப்பா. கங்கை..11 )
“ பவன்பிரம சாரி யாகும் பால்மொழி கன்னியாகும் “ ( சித்தி. 117 )
“ முன்புஉலகு ஈன்ற முகிழ்முலைக் கன்னியோடு
இன்புறும் யோகி எழுபுவிக்கு அரசே “ ( சிதம்பரச் செய்யுட்கோவை. 31 )

சிவபிரானின் ஆசைநோயாவது ஐந்தொழில்புரிதல். ஐந்தொழிலையும் சிவன் அம்மைமூலமே செய்கிறான். இதனை;

“ நம்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும் “ ( திருக்களிற்றுப்படியார் 78 )

சிவனின் ஆசைநோயாகிய ஐந்தொழில்புரிகிறவள் அம்மையாதலின் அம்மையை அந்நோய்க்கு மருந்து என்றார்.

33. **தரியேன்உன் பேர்அன்றி மற்றவர் பேரைஉன் சந்நிதியைப்**
**பிரியேன் இனிஇந்தப் பேயேன் பிறவி பிறந்(து)இறந்து**
**தரியேன் வறுமைக்(கு)என் செய்வேன் தவர்பின்பு சென்றுபரி**
**கரியேன் உலகம் வே(று)என்ன வேண்டக் கடவதுவே**

**குறிப்புரை** : தரியேன்= மனத்தில் கொள்ளேன். பிறவி= பிறப்பில். தரியேன்= சகிக்கமாட்டேன். வறுமை= உன்னருள்பெறா வறுமை. தவர்= தவத்தோர். பரிகரியேன்= நீங்கேன். வேறு வேண்டக்கடவது என்ன= செய்யக்கடமைப்பட்டது வேறு என்னஉளது.

**பொழிப்புரை** : தாயே! உன்பெயரையல்லாமல் வேறு எவர்பெயரையும் என்மனத்தில் கொள்ளேன்;உன்சந்நிதியைப் பிரிந்து செல்லமாட்டேன்; இனிமேல் பேய்போன்றநான் பல்வேறுபிறப்புகளில் பிறந்தும் இறந்தும் சகிக்கமாட்டேன்; உன்அருள்பெறா வறுமைக்கு என்னசெய்வேன்? தவத்தோர்பின் செல்வேன்; அவர்களைபிரியமாட்டேன்; இவ்வுலகில் நான் செய்யக்கடமைப்பட்டது வேறுஎன்ன உள்ளது ?

**விளக்கம்** : பிறந்து பிறந்து அலையும் பிறவிகள் :

“ புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகி
பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லா மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான் “ ( சிவபுராணம் 26- 31 )

வறுமை : அனைத்து உயிர்களும் பெறவேண்டுவது திருவருள் ஆதலின், அதுபெறாமையை வறுமை என்றார்.

34. **கடவும் கடுநடைக் கார்மேதி ஊர்திதன் கையில்அகப்**
**படவும் கெடவும் கடப்படு மோவிண் பகீரதிபோய்த்**
**தடவும் பவளச் சடையான் அலர்ந்தசெந் தாமரைக்கை**
**தொடவும் சிவந்த பதத்(து)உல காளைத் துதிசெய்துமே**.

**குறிப்புரை** : கடுநடைக் கார்மேதி கடவும் ஊர்தி= விரைந்த நடையுடைய கரிய நிறத்து எருமையைச் செலுத்தி ஊர்ந்துவரும் யமன். கடப்படுமோ= தகுதியனாவேனோ. பகீரதி= கங்கை. தடவும்= ஒழுகும். சிவந்த பதத்து= சிவந்த திருவடி

**பொழிப்புரை** : வானுலகக் கங்கை, பாய்ந்து ஒழுகும் பவளநிறத்துச் சடையனாகிய சிவபிரான், தனது மலர்ந்த செந்தாமரைஒத்த கையால் தொட்டவுடனே சிவக்கும் திருவடியுடைய உலகம்மையை வணங்கியும்கூட, விரைந்த நடையும் கரிய நிறமும்கொண்ட எருமையை ஊர்தியாகச்செலுத்திவரும் யமனது கையில் அகப்படவும், துன்புறவும் தகுதியனாவேனோ

**விளக்கம்** : யமனைப் பார்த்து;

" பட்டிக் கடாவில் வரும்அந்த காஉனைப் பார்அறிய
வெட்டிப் புறம்கண் டலாது விடேன் " ( கந்தர் அலங்காரம். 64 )

என்பார் அருணகிரியார்.

இச்செய்யுள் " சீறேல் என்று அவள் சீறடி தொழுதல் " என்ற அகப்பொருள் துறைத்து.

35. **துதிசெயும் தொண்டன் எனக்கே முழுதும் துணைசெய்துமேல்**
**விதிசெயும் செய்கை வெறும்செய்கை யாய்விட வேறுசெய்து**
**கதிசெயும் தன்பதம் காட்டும்கொ லோதரங் கப்பொருநை**
**நதிசெயும் கம்பலை நீங்காத சந்நிதி நன்னுதலே.**

**குறிப்புரை** : மேல்= மேலும். வெறும் செய்கை= பயனற்ற செயல். வேறுசெய்து= வேறுவிதி செய்து. கதி செயும்= வீடுபேறு அருளும். தரங்கம்= அலை. கம்பலை= ஆரவாரம்.

**பொழிப்புரை** : பொருநையாற்றின் அலைகள் செய்யும் ஆரவாரம் நீங்காத திருமுன்னுடைய அழகிய நெற்றியுடையவளே! விதிக்குத் துணையாகாது உன்னைப்போற்றும் தொண்டனாகிய எனக்கே முழுவதும் துணைசெய்து, மேலும் விதியானது செய்யும் செயலனைத்தும் பயனற்றுப்போக, அதின் வேறான அருள்புரிந்து, வீடுபேறளிக்கும் உன்திருவடிகளைக் காட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : எனக்கே - விதியிலிருந்து பிரித்தமையால் பிரிநிலை ஏகாரம். கொல் - அசைநிலை.

36. **நுதலைக் கிழித்துப் புறப்பட்ட தீக்கொலை நோக்கின்முழு**
**முதலைத் தமிழ்ச்சிங்கை முக்கள ஈசனை மோகம்செயும்**
**திதலைக் குரும்பைக் கரும்பேஉன் பல்லவச் சில்லரிப்பூங்**
**குதலைச் சதங்கைப் பதங்களுக்(கு) ஆட்பட்டுக் கொண்டனனே**.

**குறிப்புரை** : நுதலைக்கிழித்து= நெற்றிகண்திறந்து. தீக்கொலை நோக்கின்= தீயால் மன்மதனை நீறாக்கிய பார்வையுடைய. தமிழ்= இனிமை. முக்களஈசன்= அருள்தரு முக்களாலிங்கர். திதலை= பொற்சுணங்கு - தேமல். பல்லவம்= தளிராகிய திருவடி. சில்லரி= சிலதுளைகளுடைய. குதலை= மழலைபோன்ற மென்மையான ஒலி. ஆட்பட்டுக் கொண்டனனே= அடிமைப்பட்டேன்.

**பொழிப்புரை** : நெற்றிக்கண் திறந்ததால் வெளிப்பட்ட தீயின் மூலம் மன்மதனை நீறாக்கிய பார்வையுடைய முழுமுதற்பொருளாகிய சிவபிரானாம் இனிய விக்ரமசிங்கத்து முக்களா இறைவனுக்கு; மோகமூட்டும் பொற்சுணங்குடையதும், தென்னங்குரும்பை ஒத்ததும் ஆகிய முலைகளுடைய கரும்பு ஒத்தவளே! உன்தளிராகிய சீறடியில் சிலதுளைகளுடையதாய்ப் பூட்டியதும், மழலைபோன்று இனிமையாக ஒலிப்பதும் ஆகிய சதங்கைகள் அணிந்த திருவடிகட்கு நான் அடிமைப்பட்டுக்கொண்டேன்.

37. **கொண்டேன் உளத்(து)உல கம்மநின் நூபுரக் கோகனகம்**
**கண்டேன் ஒருவரும் காணாத காட்சியைக் கற்பகப்பூந்**
**தண்தேன் நுகர்ந்து களிதூங்கும் ஓர்சஞ் சரிகம்என்ன**
**உண்டேன் இருந்(து)அருள் ஆனந்தம் ஆம்அமிர்(து) ஓதகமே.**

**குறிப்புரை** : நூபுரக் கோகனகம்= சிலம்பணிந்த தாமரைத்திருவடி. களிதூங்கும்= மிகமகிழும். சஞ்சரிகம்= வண்டு. உண்டேன்= அருள்தேன்பருகினேன். ஓதகம்= கடல்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! ஒருவரும் காணாத காட்சியாகிய உன்திருவுருவை என்னுள்ளத்தில் கொண்டேன்; சிலம்பணிந்த தாமரையாகிய திருவடிகள் கண்டேன்: கற்பகமலரின் குளிர்ந்த தேனைப்பருகி மிக்க மகிழ்ச்சியடையும் வண்டுபோல் அமைதியாக இருந்து அருட்பேரின்பம் தரும் அமிர்தமாகிய கடலினைப் பருகினேன்.

**இலக்கணக்குறிப்பு** : நூபுரக்கோகனகம், ஆனந்தமாம் அமிர்து - உருவகங்கள்.சஞ்சரிகம் என்ன தண்தேன் உண்டேன் - உவமையணி.

35. **ஓதனம் ஆன விடத்தார் எழுதிட்ட(து) ஒப்பவிலைச்**
**சாதன ஓலையம் தாழ்குழை யாள்பதம் தன்னைநெஞ்சே**
**மாதனம் ஆக மதித்தனமோ கெடுவாய் மருண்ட**
**சேதனம் ஆக இருந்தோம் பிறந்(து)என்ன செய்தனமே.**

**குறிப்புரை** : ஓதனம் ஆன விடத்தார்= விடத்தை உணவாக உண்டசிவபிரான். எழுத்திட்டது= எழுதி வைத்தது. விலைச்சாதன ஓலை= ஒளிபொருந்திய வலிமையான ஓலை. தாழ்குழையாள்= தொங்கும்காது - வடிகாதுடைய அம்மை. மாதனம்= சிறந்தசெல்வம். மதித்தனமோ= மதிக்கவில்லை. சேதனம்= அறிவு.

**பொழிப்புரை** : மனமே! விடத்தை உணவாக உண்ட சிவபிரான் எழுதிவைத்தது போல் ஒளிபொருந்திய வலிமையான ஓலைச்சுருள் அணிந்த அழகிய வடிகாதுடையவள் திருவடியைச் சிறந்த செல்வமாக மதிக்கவில்லை, மருண்ட அறிவுடன் இருந்தாய்! பிறந்தபயனைச் செய்யவில்லை. எனவே. நீகெடுவாய்.

**விளக்கம்** : காதின் தொங்கும்பகுதியை வளர்த்து வடிகாதாக்க விரும்பிய பண்டையோர், பனைஓலையை சுருளாக்கி காதில் இட்டசிறுதுளையில் செருகுவர். அவ்வப்போது சுருளின் பருமனைச்சிறிது சிறிதாகப்பெருக்கி அணிவர். இதனால் அவ்விடம் தொங்கும் நிலைவரும். இதுவே பண்டையோர் வடிகாதாக்கிய முறை. பண்டை ஓவியம் / சிற்பக் காதுகளில் ஓலைச்சுருள் காணப்படுவதால் இதனை உணரலாம். பின்னர் அவ்விடத்தில் கனத்த அணிகலன் அணிவர். பண்டு அணிந்த ஓலையின் பெயரால் பொன்னாலான காதணியும் ஓலை எனும்பெயர்பெற்றது.

**இலக்கணக்குறிப்பு** : குழை - தானியாகுபெயர்.

39. **செய்தஅம் போதன் முதலோர் இதுஎன்று தெய்வமலர்ப்**
**பெய்தஅம் போருகப் பெண்பெரு மாள்எம் பிராட்டியைத்தன்**
**கைதவம் போத உலகேஎன்(று) ஏத்தவன் காலன்இனி**
**வை(து)அவம் போத இழைத்தாய் பிழைத்(து)என்று வாதிக்குமே.**

**குறிப்புரை** : அம்போதம்= மேகம். அம்போதன் முதலோர் இது செய்த என்று= மேகத்துக்குரிய இந்திரன்முதலியவர் செய்தன இதுஎன்று. தெய்வமலர்ப்பெய்த= தெய்வத்தன்மை வாய்ந்த மலரில் - தாமரையில் - அமர்ந்த. அம்போருகப் பெண் பெருமாள்= தாமரையில் இருக்கும் திருமகள் கணவன். என் கைதவம்= என்துன்பம். போத= அழிய. ஏத்த= வணங்க. இனி= இனிமேல். வன்காலன்= கொடியயமன்.

வைது= வைது - திட்டி. பிழைத்து= தவறாக அவம் போத இழைத்தாய்= வீணாக வரச் செய்தாய். வாதிக்கும்= வருந்துவான்.

**பொழிப்புரை** : மேகத்துக்குரிய இந்திரன் முதலியவர் செய்தது இதுவாகும் என்று, தெய்வத்தன்மை வாய்ந்த தாமரைமலரில் இருக்கும் திருமகள் கணவனாகிய திருமால், எம்தலைவியாகிய அம்மையை, தனது துன்பம் அழிய, உலகம்மையே என்று வழிபட; அதனால் இனிமேல் கொடியயமன் திருமாலைவைது என்னை வீணாக வரச்செய்து தவறுசெய்தாய் என்று வருந்துவான்.

40. **வாதித்(து) அலைத்த வினைமாற்ற வாயுவை உள்ளிருத்திச்**
**சாதித்த சித்தி தரும்யோக சாதனை தன்னில்ஒன்றிப்**
**பேதித்த தத்துவம் ஆங்கேஉள் ஆனந்தப் பேர்அமுதால்**
**சோதித் தவர்க்(கு)என் உலகாள் அருள்வந்து தோற்றிடுமே.**

**குறிப்புரை** : வாதித்து= துன்புறுத்தி. அலைத்த= கெடுத்த. வினைமாற்ற= ஊழ்வினையை மாற்றும்பொருட்டு. வாயுவை உள்இருத்தி= சுவாசக்காற்றை உள்ளேநிறுத்தி. சாதித்த சித்தி= நிறைவேறிய ஞானம். ஒன்றி= பொருந்தி. பேதித்த தத்துவம்= தம்முள்வேறுபட்ட உண்மைகள். சோதிதவர்= ஆராய்ந்தவர். உலகாள்= உலகம்மை.

**பொழிப்புரை** : துன்புறுத்திக் கெடுத்த ஊழ்வினையை மாற்ற, சுவாசக்காற்றை உள்ளேநிறுத்தி, அதனால் நிறைவேறிய ஞானத்தில் பொருந்தி, ஒன்றுக்கொன்று தம்முள் வேறுபட்ட உண்மைகளை ஆராய்ந்தவர்க்குத் தோன்றும் இன்பமாகிய ஞானஅமுதத்தால் அருள்தரு உலகம்மையின் அருள்வாய்க்கும்.

**விளக்கம்** : அட்டாங்க யோகநிலை கூறினார்.

" ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்குஅறிவார் இல்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கு அறிவாருக்குக்
கூற்றை உதைக்கும் குறி அதுவாமே "

**ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும் காற்றைப் பிடிக்கும் கணக்கை வல்லார்பால் பயின்று தேர்க.**

41. **தோற்றேன் வினைப்பகை ஐம்புல வேடரும் சூழ்ந்துமனம்**
**தேற்றேன் அறிவைச் சிறைப்படுத் தார்பசுந் தீங்குதலைக்**
**கோற்றேன் மொழிஉல கம்மாசும் மாஅவர் கோட்டிகொள்ள**
**ஆற்றேன் இனிச்செயல் அற்றேன் உனக்(கு)இன்(று) அடைக்கலமே.**

**குறிப்புரை** : ஐம்புலவினைப் பகைவேடர்= ஐந்துஅறிவுகளாலும் செய்த வினைகளாகிய வேடர்கள். சூழ்ந்து= வளைத்துக் கொண்டதால். மனம் தேற்றேன்= மனத்தெளிவுபெறேன். தோற்றேன்= அவ்வேடர்க்குத் தோற்றேன் - அவர்களே வென்றார். அறிவைச் சிறைப்படுத்தார்= என் அறிவையும் தம்ஆளுகைக்கு உட்படுத்தினர் - அப்புலவேடர்கள் ஆட்டியபடிஎல்லாம் ஆடினேன், கோல்தேன்= கொம்புத்தேன். சும்மா= எளிதில். அவர் கோட்டிகொள= அவர்களை வெல்ல. ஆற்றேன்= இயலாதவனானேன்.

**பொழிப்புரை** : ஐந்துஅறிவுகளாலும் செய்த வினைகளாகிய பகைவேடர்கள் என்னை வளைத்துக் கொண்டதால் மனத்தெளிவு பெறவில்லை. என் அறிவை அவ்வேடர்கள் ஆட்டிப்படைக்கின்றனர், கொம்புத்தேன் போன்று வளமான இனியகுதலை பேசும் உலகம்மையே! இனிஎளிதில் அவர்களைவெல்ல நான் செயலற்றேன். இன்று உன்னிடம் அடைக்கலமானேன். அருள்க.

**விளக்கம்** : ஐம்புலன்களையும் வேடராக உருவகித்தல்

" ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்துஎனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே " ( சிவஞானபோதம். சூ.8 )

என்பதைக் கருவாகக் கொண்டது இச்செய்யுள்.

**இலக்கணக்குறிப்பு** : ஐம்புலவேடர் - உருவகம்.

42. **கலசம் தருமுனிக் காமணக் கோலமும் காட்டிமந்த்ர**
**நிலசந் தனகிரிச் சாரல்நின் றாளைமுன் நீதிமறைக்**
**குலசந் ததிக்(கு)உணப் பால்கொடுத் தாளைஉட் கொண்டிருந்தும்**
**சலசந் திரசஞ் சலப்படு நெஞ்சே தடுப்ப(து)என்றே.**

**குறிப்புரை** : கலசம் தருமுனி= கும்பமுனிவர் - அகத்தியர். மந்த்ரநிலச் சந்தனகிரி= மலைநிலமாகிய பொதிகைச்சாரல். மறைக்குலசந்ததி= வேதியர்குலத் திருஞானசம்பந்தர். உட்கொண்டிருந்தும்= என்மனத்தில் கொண்டிருந்தும். சல சந்திர சலனம்= நீரில் தோன்றும் நிலா உருவம்போல் பலவாறு கலங்கும். தடுப்பது= சலனம்ஒழிப்பது.

**பொழிப்புரை** : அகத்திய முனிவர்பொருட்டுத் தன்திருமணக்கோலமும் காட்டி, மலைநிலமாகிய பொதிகைமலைச் சாரல் விக்ரமசிங்கபுரத்தில் - பாவநாசத்தில் எழுந்தருளியும் உள்ளவளும், நீதிகூறும் மறைக்குலமகனாகிய திருஞானசம்பந்தர் பருகப்பால்கொடுத்தவளும் ஆகிய அருள்தரு உலகம்மையை என்மனத்தில் பதித்திருந்தும் நெஞ்சே, நீரில் தோன்றும் நிலா உருவம் கலங்குவதைப் போல்நீ கலங்குவதைத் தடுப்பது எந்நாளில்!

**விளக்கம்** : கயிலையில்நடந்த சிவபிரான் பார்வதிதேவி திருமணம்காணவிண்ணவரும்மண்ணவரும் கூடியதால் நிலவடக்குத்தாழ, தெற்கு மேலேறியதால் நிலத்தைச் சமன்செய்ய, சிவபிரான் அகத்தியரை தெற்கேசென்று நிலத்தைச் சமப்படுத்துமாறுகூற, பெருமானின்திருமணம் காணும் தன்பெருவிருப்பை அகத்தியர் கூறியதால் உனக்கு அங்குவந்து திருமணக்காட்சியருள்வோம் என்று அருளிய புராணவரலாறு சுட்டினார்.

**இலக்கணக்குறிப்பு** : கோலமும் - எதிரது தழுவிய எச்சவும்மை. உட்கொண்டிருந்தும்- உயர்வுசிறப்பு உம்மை. இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமயணி.

43. **என்றைக்கும் நீதுணை அம்மாஎன் ஆவி இறந்துவிடும்**
**அன்றைக்கும் ஓடிவந்(து) அஞ்சல்என் பாய்நச்(சு) அரையன்**
**மின்தைக்கும் மாவைஅம் கோடீர காந்தி விளங்குபொலம்**
**கொன்றைக்கும் ஏற்றிய பொற்றாள் சிமையக் குலக்கொழுந்தே.**

**குறிப்புரை** : இறந்துவிடும்= வெளியேறும். நச்சு அரையன்= நாகம் கட்டிய இடையன் - சிவபிரான். மின்தைக்கும் மாவை= உன்ஒளிபொருந்திய அழகை. அம்= அழகிய. காந்தி விளங்கும் கோடீரம்= ஒளிரும் கிரீடம். பொலம் கொன்றை= பொன்னிறக் கொன்றைமலர். பொற்றாள்= பொன்போலும்திருவடி. சிமயம்= இமயமலை - மகவான்.

**பொழிப்புரை** : நாகத்தை இடுப்புக்கயிறாகக்கட்டிய சிவபிரானுக்கு ஒளிபொருந்திய அழகினை அளித்ததுடன், அவனது அழகிய திருமுடியில் விளங்கும் பொன்போலும்நிறமுடைய கொன்றைமலருக்கும் அழகுஅளித்த பொன்போலும் திருவடியுடையவளே! இமயம் ஈன்ற குலக்கொழுந்தே! தாயே! என்றைக்கும் நீயே எனக்குத்துணை. என்னுயிர் உடல்விட்டு வெளியேறும்நாளிலும் ஓடிவந்து அஞ்சேல் என்று அருள்க.

**விளக்கம்** : அம்மையின் பொன்போலும் திருவடி, அப்பனின் திருமுடியில் சூடியுள்ள கொன்றை மலருக்கும் அந்நிறஅழகு அளித்தது என்பதன்மூலம், அம்மையின் திருவடியில் கொன்றைசூடிய திருமுடிபட அப்பன் வணங்கியது குறித்தார். இதுவும்" சீறேல் என்று அவள் சீறடி பணிதல் " துறையாகும்.

44. **கொழுந்து நிலவும் பிறைமான நாறும் குழகன்முடிக்(கு)**
**அழுந்து வரிவில் கனகா சலத்(து)உன் கணவரொடும்**
**எழுந்து விடையில் புறப்படுவாய் உலகே இனிப்போய்**
**விழுந்து நிரையத்(து) அழுந்தா(து)என் ஆவிவி டும்பொழுதே.**

**குறிப்புரை** : கொழுந்து நிலவும்= ஒளியுடைய. பிறைமான= பிறைபோன்ற. முடிக்கு அழுந்துவில்= சடையில் புதையும்வில். கனகாசலத்து= மேருமலையையுடைய. நிரயத்து விழுந்து= நரகில் விழுந்து.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! நான் இனிமேல் உயிர்விடும்போது, நரகத்தில் போய் விழுந்து மூழ்காமல் இருக்க, ஒளிவிளங்கும் பிறைபோலவிளங்குவதும்,சிவபிரான்முடியில் - சடையில் புதைவதும் ஆகிய இழுத்துகட்டப்பெற்ற மேருமலையாகிய வில்ஏந்திய உடைய உன்கணவனுடன் ஊர்தியாகிய விடையில் புறப்பட்டு வருவாயாக.

**விளக்கம்** : பிறைபோல் வளைந்தவில் என்க. சடையில் வில்புதைய என்றதன் மூலம் வளைந்த வில்லின் உயரம் குறித்தார். ஏந்தியவர் காதளவுமாறு வில் இருக்கவேண்டும் என்பர்.

**இலக்கணக்குறிப்பு** : முடிக்கு - உருபுமயக்கம். இச்செய்யுள் உவமையணி.

45. **பொழுது கழிந்தது வீணே எனக்(கு)என்னே புத்திஉன்னைத்**
**தொழுது பணிந்து துதித்தில னேஇதைச் சொல்லிச்சொல்லி**
**அழுது புலம்பில் விடுமோ எமன்இனி ஆயினும்என்**
**பழுது களைந்து புரப்பாய் உலகம் படைப்பவளே.**

**குறிப்புரை** :என்னேபுத்தி= அறிவில்லை. இனியாயினும்= இனிமேலாவது. பழுது= குற்றம்.

**பொழ்ப்புரை** : உலகத்தைப் படைப்பவளே! என்வாழ்நள் வீணேகழிந்தது; எனக்கு அறிவில்லை; உன்னைப்போற்றியும் வணங்கியும் துதிக்கவில்லை; இப்படிப்பலமுறை சொல்லிச்சொல்லி அழுதுபுலம்பின் யமன் என்னை விட்டுவிடுவானா! எனினும் எனது துன்பங்களை அடியோடுபோக்கி என்னைக்காத்தருள்க. .

**விளக்கம்** : உலகம் படைப்பவள் என்றதனால் இனமானபிற நாற்றொழிலும் கொள்க.

**இலக்கணக்குறிப்பு** : என்னே - கழிவிரக்கச்சொல். சொல்லிச்சொல்லி= அடுக்குத்தொடர். விடுமோ - எதிர்மறை ஓகாரம்.

46. **படைப்பார் ஒருவர் அளிப்பார் ஒருவர்அப் பால்ஒருவர்**
**துடைப்பார் பிறகுதொழில்வே(று)இரண்டு தொகுத்துவைத்(து)**
**அடைப்பார் இருவர் எனத்திரி வார்உல கம்மமற்(று)உன்**
**கடைபார்வை செய்கின்றது ஒன்றால் ஐந்(து)ஆதிக்கக் காரருமே.**

**குறிப்புரை** : படைப்பார் ஒருவர்= படைப்பவர் பிரமன். அளிப்பார் ஒருவர்= காப்பவர் திருமால். ஒருவர் துடைப்பார்= உருத்திரன் அழிப்பார். பிறகு தொழில்வேறுஇரண்டு= எஞ்சிய இருதொழில்களாகிய மறைத்தல் அருளல் இரண்டையும். அடைப்பார் இருவர்= நிறைவுசெய்கிறவர் முறையே மகேசன், சதாசிவன். திரிவார்= செய்கிறவர். ஐந்து ஆதிக்கக்காரரும் செய்கின்றது உன்கடைக்கண்பார்வை ஒன்றால்= ஐந்தொழில் புரிவோர் செய்வது உன்கடைகண் பார்வைஒன்றினால் மட்டுமே - கடைக்கண் பார்வை ஒன்றால் நீ ஒருத்தி செய்யும் ஐந்தொழிலை, ஐவர்செய்கின்றனர்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! நீ உன்கடைக்கண் பார்வை ஒன்றினால்செய்யும் ஐந்துதொழில்களில், படைத்தலைப் பிரமனும், காத்தலைத் திருமாலும், அழித்தலை உருத்திரனும், மறைத்தலை மகேசனும், அருளலைச் சதாசிவனும் செய்துவாழ்கின்றனர்.

**விளக்கம்** : சிவபிரானது திருவுளக்குறிப்பால் ஐந்தொழிலையும் ஒக்கச்செய்கிறவள் அம்மையே. சிவனல்லன். இதனை ஸ்ரீ குமரகுருபர அடிகள் நயம்பொருந்தத் தில்லை அம்பலவாணனை நோக்கி;

" சீராட்டு நினக்குஇலைஅச் சீராட்டும் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டு உன்பெயர்த்தாகி நடப்பதே." என்கிறார்.
( சிதம்பர மும்மணிக்கோவை. 68. தாழிசைஎண் 2 : 2 )

" அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம் " ( சித்தி. 69.)

ஐவரும் தத்தமக்குரிய செயலைச்செய்வதற்கே உரியவர் ஆதலின் அவர்களைஆதிக்கக்காரர் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : மற்று - வினைமாற்று.

47. **காறும் துவர்க்கும் புளிக்கும்கைப் பாம்என் கவிமுறைப்பாட்(டு)**
**ஏறும் திருச்செவிக்(கு) ஏறா(து) என்றாலும் எளியன்உன்பேர்**
**கூறும் தொழில்விட்டு மற்றுஓர் தவம்செய்து கொண்டுநின்னைத்**
**தேறும் படிக்(கு)உல கம்மஎன் பாழ்மனம் செல்வல்லவே.**

**குறிப்புரை** : காறும்= உறைக்கும். கைப்பு= கசப்பு. கவிமுறைப்பாடு= கவிதமூலமான முறையீடு. ஏறாது= கேட்காது. செல்வல்லவே= செல்லாது.

**பொழிப்புரை** : உறைப்பதும் துவர்ப்பதும் புளிப்பதும் கசப்பதும் ஆகிய என்கவிதைகளால் ஆன முறையீடு, பிறர் முறையீடுகளைக் கேட்டு அருள்புரியும் உனது திருச்செவியில் ஏறாது - கேட்காது என்றபோதிலும், என்னைக்காக்க உன்பேர்சொல்லி உன்னை அழைக்கும் செயலைத்தவிர, வேறுஒரு செயலாகிய தவத்தின்மூலம் உன்னருள்பெற எனது பாழானமனம் செல்லாது. உன்பெயர்சொல்லி உன்னையே அழைக்கும்.

**இலக்கணக்குறிப்பு** : மற்று - வினைமாற்றுப்பொருளில் வந்தது. பாழ்மனம்- வினைத்தொகை.

48. **செவ்விக் கலையின் மதியே மதிஎனத் தீமைஅராக்**
**கௌவிக் கிடந்தது கண்(டு)இரங் காய்எந்தை கண்ணுதலான்**
**நௌவிக் கருங்கண் உலகேபொன் ஆசையி னால்பிறரை**
**வௌவித் திரிந்தனன் இப்படி யோஎன்னை வாழ்வித்ததே.**

**குறிப்புரை** : செவ்விக்கலையின் மதியே= அழகிய கலைகள் நிரம்பிய அறிவே. மதி= விருப்பம். அரா= பாம்பு. நவ்விக் கருங்கண்= மானின் மருண்ட கரிய கண். வௌவி= கவர்ந்து.

**பொழிப்புரை** : என்தந்தையாகிய சிவபிரான் கையில் ஏந்திய மானின் கருமையான கண்ணொத்த மருண்டகண்களுடைய அருள்தரு உலகம்மையே! அழகியகலைகள் நிரம்பியநிலவே என்விருப்பம் என்றுகூறும் தீவினையாகியநாகம் என்அறிவைக் கவ்விக்கொண்டு கிடந்ததைக்கண்டும், என்மேல் இரக்கம்காட்டவில்லையே! பொன்னாசையால் பிறரிடம் அதைக்கவர்ந்துகொண்டு திரிந்தேன், நீஎன்னை வாழ்வித்தது இப்படித்தானா?

**விளக்கம்** : அரவு முழுமதியைக் கவர்வதுபோல் என்னறிவை ஆசையாகிய தீமைகவர்ந்ததென்றார்.

**இலக்கணக்குறிப்பு** : தீமை அரா - உருவகம். இச்செய்யுள் ஏகதேச உருவகவணி.

49. **வாழ்வித்த(து) ஒன்றிலை இந்நாள் வரையும் வறுமையினால்**
**தாழ்வித்த தீங்(கு)ஒரு சற்(று)அல வேஇத் தனையும்நிற்க**
**வீழ்வித்த(து) என்னை அரும்கொடு நோய்க்குள்வெவ் வேறுகெட்டேன்**
**ஊழ்வித் தகம்என்ன சொல்வேன் உனக்(கு)என் உல(கு)அம்மனே.**

**குறிப்புரை** : ஒன்றிலை= ஒன்றுமில்லை. தாழ்வித்த= கைஏந்தச்செய்த. இத்தனையும்நிற்க= இவைகிடக்க. வீழ்வித்தது= வீழச்செய்தது. வெவ்வேறு அரும் கொடும் நோய்க்குள் வீழ்வித்த ஊழ்வித்தகம் என்க. அரும்கொடு நோய்= அரிய கொடிய நோயாகிய முப்பாசம். ஊழ்வித்தகம்= ஊழ்வினையின் சாமர்த்தியம். அம்மனே= தாயே.

**பொழிப்புரை** : தாயே! இதுநாள்வரை என்னை வாழ்விக்கவில்லை; உன்அருளில்வறுமைப்பட்டதால், என்னைத் தாழ்த்திய தீங்கு ஒருசிறிதளவில்லை. இதுகிடக்க; என்னைத் தீர்த்தற்கரிய கொடிய முப்பாச நோய்க்குள் என்னைச் சாமர்த்தியமான ஊழ்வினை விழ்த்தியதுபற்றி என்னவென்று சொல்வேன். அருள்க.

**விளக்கம்** : ஆணவம் கன்மம் மாயை என்ற பாசங்கள் மூன்றும் எளிதில் தீர்க்கவியலாத அளவு மிகக்கொடியனவாதலின் அரும்கொடு நோய் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இலை, அல - இடைக்குறைகள். அரும்கொடுநோய் - உருவகம்.

50. **அம்மனை பந்து கழங்காக் குலாசலம் அத்தனயும்**
**எம்அனை அங்கை எடுத்(து)ஆடு நாள்உல(கு) ஈன்(று)எடுத்த**
**செம்மனை நுண்மருங்(கு) இந்திரை கேள்வன்அத் தேவர்எலாம்**
**தம்மனை என்று புகுவார் இவள்மலர்த் தாளிணைக்கே.**

**குறிப்புரை** : குலாசலம்= மலையினங்கள். எம் அனை= எமது தாய். அங்கை= அழகியகை. உலகு ஈன்றெடுத்த செம்மனை தம்மனை என்று புகுவார் என்க. இந்திரை கேள்வன்= திருமகள் கணவன் - திருமால். நாள்= ஊழிக்காலத்தில்

**பொழிப்புரை** : அம்மனைஎன்றும், பந்துஎன்றும், கழங்குஎன்றும் மலைக்குலங்கள் அனைத்தையும் எமது தாயாகியநீ எடுத்துஆடும் ஊழிக்காலத்தில், மெல்லிய இடையுடைய திருமகள்கணவனாகிய திருமால் முதலிய தேவர்கள் அனைவரும் நம்மை ஈன்றெடுத்த சிறந்ததாய் என்று உலகம்மையாகிய இவளது இருதிருவடியில் புகுந்து ஒடுங்குவர்.

**விளக்கம்** : திருமால் முதலிய உயிர்க்குலம் அனைத்தும் ஐந்தொழிபுரியும் அம்மையின்திருவடிகளில் ஒடுங்குவர். ஒடுங்குதல் என்பது உயிர்களின் கன்மமலம் பக்குவப்படுதற்பொருட்டும், அதிலிருந்து மீளத்தோன்றல் ஆணவமலம் பக்குவப்படுதற்பொருட்டும் ஆம் என்பது மெய்ப்பொருளியல்.

( சிவனானபோதச் சிற்றுரை விளக்கம் : பொ. முத்தையபிள்ளை. பக் 46 ).

51. **தாள்என்ற கிண்கிணிப் பங்கயப் பூவைத் தலையின்முடித்**
**தாள்என்று சொன்ன(து) அநேகமுண் டேஉனை ஆதரித்தும்**
**கோளென்ற வல்வினை தீராவி டில்ஐய கோபிழைக்கும்**
**நாள்என்று மங்கல கல்யாண சுந்தர நாயகியே.**

**குறிப்புரை** : தாள்= திருவடி. பங்கையப் பூவை= தாமரை மலரை. தலையின்முடித்தாள்= என்தலையில் சூட்டினாள். ஆதரித்தும்= அன்புகாட்டியும். கோள் என்ற வல்வினை= ஒன்பான்கோள் தரும் கொடிய துன்பம். பிழைக்கும் நாள் என்று= நான் ஈடேறுவது எந்நாளில்.

**பொழிப்புரை** : உனது திருவடி என்கிற கிண்கிணியணிந்த தாமரை மலரை என்தலையில் சூட்டினாள்என்று பலமுறை சொன்னதுண்டு. உன்மேல் அன்புகாட்டியும் ஒன்பான்கோள் தரும் கொடிய துன்பம் தீராவிட்டால் ஐயோ! மங்கலையான கல்யாணசுந்தர நாயகியே! நான்ஈடேறும் நாள் எந்நாள்!

**விளக்கம்** : சிவன் - பொருள், சத்தி -பொருளின் உள்ளுறை ஆற்றல். பொருளும் ஆற்றலும் வெவ்வேறு வடிவம்கொள்ளுமே தவிர அழிவற்றன என்பது ஆன்மிகமும் அறிவியலுமாதலின் ஆற்றலாகிய அம்மைக்கு மங்கலம் என்ற அடைமொழிதந்தார்.

**இலக்கணக்குறிப்பு** : தாளென்ற..... பூ - உருவகம்.

52. **நாயக மண்டல முக்கோணத் தேஉன்னை நாடும்இந்தப்**
**பேயகம் அண்டர்தம் பே(று)எண்ணு மோபெரும் பேருவரி**
**போய்அகம் மண்டிடும் காவிரி ஈந்தருள் புங்கவன்கைத்**
**தூயக மண்டல நன்னீர்ப் பொருநைத் துறைஅன்னமே.**

**குறிப்புரை** : மண்டலநாயக முக்கோணத்தே= வட்டவடிவமண்டலத்தில் தலைமை சான்ற முக்கோணத்துள். உன்னை நாடும்= உன்னை நினைக்கின்ற. இந்தப் பேய் அகம்= வெறிகொண்டஇந்த என் உள்ளம். அண்டர்தம் பேறு எண்ணுமோ= தேவராகும் பேற்றை நினைக்குமோ. - உன்திருவடியடையும் பேற்றையே நினைக்கும். பெரும் பேர்உவரி அகம்போய் மண்டும்= மாபெரும்கடலின் உள்ளிடத்தில் போய் நிறையும். புங்கவன்= அகத்தியர்.

**பொழிப்புரை** : மாபெரும் கடலின் உள்ளிடத்தில் போய்ச்சேர்ந்து நிறைவடையும் காவிரி தந்த அகத்தியர் கையில் ஏந்திய தூயகமண்டலத்தின் நன்னீராகிய பொருநையாற்றின் துறையில் திருக்கோயில் கொண்ட அன்னம் ஒத்தவளே! வட்டவடிவ மண்டலத்துள் தலைமைசான்ற முக்கோணத்தில் உன்னை விரும்பி நினைக்கும் இந்தவெறிகொண்ட என்மனம் தேவர் ஆகின்ற பேற்றினை நினைக்குமோ ? இல்லை. உன்திருவடி நிழல்சேர்வதையே நினைக்கும்.

**விளக்கம்** : அடியார் வேண்டுவது தேவர் இந்திரன் நான்முகன் திருமால் வாழ்வன்று. அவை அனைத்தும் பிறப்புக்குரியனவாதலின் அன்னையின் திருவடிநிழலடையவே நினைப்பர்.

" கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு " ( திருவாசகம். 6 )

" பாவநாசா உன்பாதமே அல்லால்
பற்றுநான் மற்றுஇலேன் கண்டாய் " ( திருவாசகம். 456 )

அகத்தியரின் கமண்டலநீர் காவிரியாக மட்டுமன்றிப் பொருனையாகவும் பெருகியதாக ஒருபுராணம் உண்டுபோலும். இதனைக்குறிப்பதுஈற்றடி.

53. **அன்னம் பழகும் பிடிநடை யாள்உல கம்மைசெம்மை**
**கன்னம் பழகும் கயல்பார்வை வெள்ளைக் கருணைக்குளே**
**முன்னம் பழகும் பழஅடி யாரை முழுதும்நம்பி**
**இன்னம் பழகும் பொழுதே வருமுத்தி இன்பங்களே.**

**குறிப்புரை** : பிடிநடை= பெண்யானையின் அசைந்தநடை. பழகும்= தொடும். வெள்ளை= தூய்மை. பழஅடியார்= பழைமையான அடியார். இன்னம்பழகுதல்= விடாது தொடர்ந்து பழகுதல்.

**பொழிப்புரை** : அன்னப்பறவை வந்து பழகும் பெண்யானையின் அசைந்த நடையுடையவளாகிய அருள்தரு உலகம்மையின் கெண்டை விழிகள் கன்னமுடன் பழகுவனவாகும்.. அவளது தூயகருணைப் பெருக்கில் பண்டுமுதல் திளைக்கும் பழைமையான அடியவரை நம்பி, விடாது தொடர்ந்தால் முத்தி இன்பம்வாய்க்கும்.

**விளக்கம்** : பழைமையான அடியவர் பக்குவப்படவராதலின் அவரொடு தொடர்ந்து பழகுவதால் அப்பக்குவம் தானேவந்து வாய்க்க முத்திஇன்பமும் தானேவந்துவாய்க்கும் என்றார்.

54.

**இன்பம் தரும்நல் வினையில்லை யோஎளி யேற்(கு)உளது**
**துன்பம் தரும்கொடுந் தொல்வினை யோஎந்தை சோகம்கண்டு**
**முன்(பு)அந் தரதுந் துமிஓங்(கு) இமாசலம் முன்றிலிட்ட**
**நன்பந் தரில்நின் றுசற்றே கவிழ்ந்து நகைத்த பெண்ணே.**

**குறிப்புரை** : சோகம்= வெறுப்பும், துய்ப்பன தெவிட்டலும். அந்தரம் துந்துமி= வானுலக இசைக்கருவிகள். இமாசலம்= இமயமலை. நன்பந்தர்= திருமணப்பந்தர். சற்றே நகைத்த= புன்முறுவல் பூத்த.

**பொழிப்புரை** : முன்னொருகாலத்தில் வானுலக இசைக்கருவிகள் முழங்கும் இமயமலைமுற்றத்தில் இடப்பெற்ற திருமணப்பந்தரில் எம்தந்தையாகிய சிவபிரானின் வெறுப்பும் துய்ப்பன தெவிட்டலும்கண்டு - வெறுப்பு விருப்பில்லாநிலை கண்டு சற்றேதலைகவிழ்ந்து புன்முறுவல் பூத்தவளே! அற்பனாகிய எனக்குஇன்பம்தரும் நல்லூழ் இல்லையோ ? என்பாலுள்ளது துன்பம்தரும் கொடிய தீயூழோ அறியேன். நலம் அருள்க.

**விளக்கம்** : திருமணம்பற்றி விருப்பு வெறுப்பற்ற சமநிலை உள்ளத்தைச் சோகம் என்றார்.

55.

**பெண்மைத் திருவுருப் பெம்மான் உடம்பில் பிறர்க்(கு)உணர்த்தும்**
**உண்மைப் பொருளை உல(கு)உடை யாளை உணர்ந்திலையே**
**கண்மைக் குவளை அமிர்தப் ரவாகக் கருணைகண்டு**
**வண்மைக் கடலும் வறுமைக்குள் ளாய்நின்ற வன்நெஞ்சமே.**

**குறிப்புரை** : பெண்மைத் திருஉருப் பெம்மான்= அம்மையப்பன் திருமேனி உருவம் கொண்ட சிவபிரான். பிறர்க்கு உணர்த்தும் உண்மைப்பொருளை= அம்மையும் அப்பனுமாக உள்ள நாங்கள் பிரிவதில்லை என்ற - ஆற்றலும் பொருளுமாய் உள்ளவை பிரிவதில்லை என்ற - உண்மைப்பொருளாக விளங்குகிறவளை, உலகெலாம் உடையாளை= உலகெலாம் தன் உடைமையாக உடையவளை. மைக்கண் குவளை= மைதிட்டப்பெற்ற கண்களாகிய குவளைமலர்கள். அமிர்தப்ரவாகக் கருணை= அமிர்தப்பெருக்காம் கருணை. வண்மைக்கடலும்= வளமான கடலில்இருந்தும். வறுமைக்குள்ளாய்= வளம்பெறாது விளங்கிய. .

**பொழிப்புரை** : ஒருவன் வளம்மிக்க கடலில் இருந்தபோதிலும் அவ்வளத்தைப்பெற்று அனுபவிக்காதது போல், மைதீட்டப்பெற்ற கருங்குவளைமலர்களாகிய கண்களிலிருந்துஅமுதபெருக்காகிய கருணை பெருகுவது கண்டும் அதைப்பெற்று அனுபவிக்காத கொடிய மனமே! அம்மையப்பன்திருமேனியின் மூலம் நாங்கள் இணைந்தே இருப்போம் என்பதை அனைவர்க்கும் உணர்த்தும் ஞானப்பொருளாய் விளங்குகின்றவளை, உலகனைத்தையும் தனக்கே உரிமையாக உடையவளை நீ இதுவரைக்கும் உணரவில்லையே.

**விளக்கம்** : இச்செய்யுள் சத்திவழிபாட்டினராகிய சாக்தருக்குக் கூறியதுபோல் தோன்றுகிறது.
இச்செய்யுள் " வெள்ளத்துள் நாவற்றியாங்கு உன் அருள்பெற்றும் துன்பத்தினின்றும் விள்ளக்கிலேனை " என்ற திருவாசகக் கருத்தை ( 118 ) எதிரொலிக்கிறது

56. **நெஞ்சுக்குள் ளேஎங்ஙன் வைப்பேன்உன் பாதம் நினைந்துபுலன்**
**அஞ்சுக்கு ளேஒன்றுக் கானாலும் இல்லை அறிவுகெட்டேன்**
**நஞ்சுக்குள் ளேநல்ல(து) உண்டோஎண் தோள்எந்தை நாள்நிலவுப்**
**பிஞ்சுக்குள் ளேசிவப்(பு) ஊட்டிய தாள்துணைப் பெண்கொடியே.**

**குறிப்புரை** : புலன் அஞ்சுக்குள்ளே= ஐம்புலன்களில். ஒன்றுக்கானாலும் அறிவு இல்லை. கெட்டேன் என்க. நஞ்சுக்குள்ளே= ஐம்புலன்களாகிய விடங்களில். நாள்நிலவுப் பிஞ்சு= மூன்றாம்பிறையாகிய பிஞ்சு. சிவப்பூட்டிய= ( பட்ட சீறடிகாரணாகச் )சிவக்கச்செய்த. துணைத்தாள்= இருதிருவடி.

**பொழிப்புரை** : எட்டுத்தோள்களுடைய எம்தந்தையாகிய சிவபிரானின் தலையில் உள்ள மிகவும் இளைய மூன்றாம்பிறைசிவக்குமாறு உதைத்த இருதிருவடிகளுடைய பெண்ணாகிய கொடியே! என்மனத்தில் உன்னை எவ்வாறு வைக்கவியலும்! நஞ்சாக உள்ள ஐம்புலன்களில் நல்லது உண்டோ? அவ்வஞ்சுக்குள் ஒன்றுக்கேனும் நல்லறிவு இல்லை. அதனால் கெட்டேன்.

**விளக்கம்** : சீறேல் என்று சீறடியில்பட வணங்கும்போது உதைத்ததால் பிறைசிவந்ததென்றார். எண் தோளன் சிவபிரான் :

" கண்காள் காண்மின்களோ - கடல் நஞ்சுண்ட கண்டன்தனை
எண்தோள் வீசிநின்று ஆடும்பி ரான்தன்னைக் கண்காள் காண்மின்களோ ( திருமு. 4 )

**இலக்கணக்குறிப்பு** : நஞ்சுக்குள்ளே நல்லது உண்டோ - வேற்றுப்பொருள் வைப்புஅணி

57. **கொடியேன் மனமும் குழையேன்உன் பேர்சொல்லிக் கூப்பிட்(டு)உன்சீர்**
**படியேன் இனிஎப் படிப்பிழைப் பேன்எமன் பாசம்விட்டால்**
**அடியேன் விடுவி(டு)என்(று) அப்போ(து) அடிக்கும் அடிவிலக்கி**
**மிடியேனை அம்ம உலகே எவ்வாறு விடுவிப்பையே.**

**குறிப்புரை** : படியேன்= படிக்கவில்லை. விடுவிடு= பாசம் விடாதே விட்டுவிடு. மிடியேனை= துன்புற்ற என்னை.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! கொடியவனாகிய நான் என்மனம் இளகாதிருக்கின்றேன். உன்பெயர்சொல்லி உன்னை அழைத்து உன்சிறப்புகளைப் படிக்கவில்லை. யமன் பாசக்கயிற்றை வீசினால் அதிலிருந்துஎப்படிப் பிழைப்பேன் ! இவனை விட்டுவிடு விட்டுவிடுஎன்று அவன் அடிக்கும்அடியை விலக்கித் துன்புறும் என்னை எவ்வாறு அவனிடமிருந்து விடுவிப்பாய் தாயே.

**இலக்கணக்குறிப்பு** : விடு விடு - அடுக்குத்தொடர். அம்ம - விளி.

58. **விடுபோந் தவன்என் அடியானென்(று) ஓடி விலக்குவையோ**
**கொடுபோய் நரகில் குளிப்பாட்டு போஎன்று கூறுவையோ**
**அடுபோர் அயில்முத் தலைவேல் நமன்செய்யும் ஆக்கினைக்(கு)உட்**
**படும்போ(து)என் சொல்வாய் உலகேநீ உன்ப ராக்(கு)ஒழிந்தே.**

**குறிப்புரை** : போந்து அவன் விடு= வந்து அவனை விடு. கொடுபோய்= கொண்டுபோய். அடுபோர்= கொல்லும்போர். ஆக்கினை= ஆணை. பராக்கு= பாராமை

**பொழிப்புரை** : கொல்லும் போர்புரியும் சூலம்ஏந்திய யமன் சொல்லும் ஆணைக்கு நான் உட்படும்போது ஓடிவந்து, " யமனைப்பார்த்து அவனைவிடு, அவன் என்அடியான் " என்று தடுப்பாயா? அல்லது " இவனைக்கொண்டுபோய் நரகில் குளிப்பாட்டுபோ " என்று கூறுவாயா? இதுவரை எனக்கு அருளாத உன்நிலையைக் கைவிட்டுத், தாயே என்னசெய்வாய் ?

**இலக்கணக்குறிப்பு** : விலக்குவையோ, கூறுவையோ - வினாஓகாரங்கள். அடுபோர் - வினைத்தொகை. முத்தலை வேல் - முத்தலை - இனம்விலக்கிய அடைமொழி.

59. **ஒழிவாய்த் தவம்விட்(டு) உலையார்என் அம்மை உல(கு)அடியார்**
**விழிவாய்ப் படும்செவி வெவ்வாய்அ ராவெள்ளி வெற்(பு)அறுபட்(டு)**
**அழிவாய்ப் பகிரண்டத்(து) ஆயிரம்கோடி அடுக்குமுந்நீர்க்**
**குழிவாய்ப் புனலில் குலைவாய்க் கிடந்து குழம்பினுமே.**

**குறிப்புரை** : என்அம்மைஉலகு அடியார் தவம்விட்டு ஒழிவாய் உலையார் என்க. தவம்விட்டு ஒழிவாய்= தவத்தைக் கைவிட்டொழிந்து. உலையார்= மனம் தளரார். விழிவாய்ப்படும் செவி வெவ்வாய் அரா= கண்ணையே காதாகக் கொண்டதும், விடப்பற்களுடையதும் ஆகிய நாகம் - ஆதிசேடன். வெள்ளி வெற்பு= கயிலைமலை. அறுபட்டு அழிவாய்= துண்டுகளாகி அழிந்து. ஆயிரம்கோடி அடுக்குப் பகிரண்டம் = ஆயிரம்கோடி எண்ணிக்கையுடையபேரண்டவெளி. முந்நீர்க் குழிவாய்ப் புனல்= கடலின் ஆழநீரில். குலைவாய்க்கிடந்து= உருக்குலைந்து கிடந்து. குழம்பினும்= சேறானாலும்.

**பொழிப்புரை** : கண்ணையே காதாகக் கொண்டதும், விடப்பற்களுடையதுமாகிய ஆதிசேடனும், கயிலைமலையும், ஆயிரம் கோடிஅடுக்கு எண்ணிக்கையுடைய பேரண்டவெளியும் துண்டுகளாகி அழிந்து, கடலின் ஆழநீரில் உருக்குலந்து சேறுஆனபோதிலும், எனது தாய்ஆகிய அருள்தரு உலகம்மையின் அடியார்கள், தமது மனம்தளர்ந்து தவத்தை விட்டொழியார்.

**விளக்கம்** : இச்செய்யுளின் இறுதி மூன்றடியும் பேரூழிபற்றிக் குறிப்பன. முதலடி அடியார்களின் மனவுறுதிப்பாட்டினைக் குறிப்பது. பாம்பு, செவியின்றி; பார்வை, நில அதிர்ச்சி ஆகியவற்றை மட்டும் உணர்ந்து செயற்படுவது ஆதலின் அதனைக் கட்செவி என்பர்

**இலக்கணக்குறிப்பு** : வெவ்வாய் - முதலாகுபெயர் அல்லது இடவாகுபெயர் ஆகும்.

60. **குழக்கன்று உலவை மலைப்பா ரிசத்தில் குடிஇருக்கும்**
**பழக்கன் திருவுருப் பாதிசெய் தாய்இந்தப் பாவிகண்ணீர்**
**உழக்கன்(று) உரியன்(று) ஒருகோட்டை உண்டுகண் ஓட்டைபட**
**அழக்கன் றியதுன்பம் தீராய்கொல் உன்அடி யார்க்கன்றியே.**

**குறிப்புரை** : குழக்கன்று= இளைய முருகன். உலவை மலைப்பாரிசம்= வள்ளிக்கொடி படந்த மலைப்பக்கம் பழக்கன்= பழைமையானவன் - அநாதியானசிவபிரான்.பாதிசெய்தாய்=பாதியாக்கினாய்.உழக்கு, உரி, கோட்டை= அளவைப்பெயர்கள். ஓட்டைபட அழ= பார்வை சிதையுமாறு கண்ணீர்விட்டழ. கன்றிய= நொந்த.

**பொழிப்புரை** : இளைய முருகனுடன், வள்ளிக்கொடிபடர்ந்த மலைப்பக்கம் குடியிருக்கும் அநாதியான சிவபிரான் உடம்பில் இடம்கொண்டு அதைப் பாதியாக்கியவளே! பாவியாகிய நான் பெருக்கிய என்கண்ணீர் உழக்கோ உரியோவல்ல. ஒருகோட்டையளவாகும். அதனால் பார்வை சிதையுமாறு நான் அழுது நொந்த என்துன்பத்தை உன் அடியார்க்கலாமல் தீர்க்கமாட்டாய் போலும்.( உன் அடியார் துன்பமே தீர்ப்பாய்போலும் என்றார் ) .

**விளக்கம்** : உழக்கு= காற்படி. உரி= அரைப்படி. கோட்டை= 24 மரக்கால் கொண்டது.

**இலக்கணக்குறிப்பு** : குழக்கன்று - உரிச்சொற்றொடர். கொல் - ஐயப்பொருள்தரும் இடைச்சொல்.

61. **அன்றில் பெயர்க்குன(று) எறிந்தோனைப் பெற்றஎன் அம்மைதமிழ்க்**
**குன்றில் பிறந்த குழந்தைமந் தாநிலம் கொம்பனையார்**
**முன்றில் பிறந்தவள் சிங்கைகங் காதர மூர்த்திஇடம்**
**ஒன்றில் சிறந்(து)அது வேகுடி யாய்வந்(து) உறைந்தனளே.**

**குறிப்புரை** : அன்றில் பெயர்க்குன்று= கிரௌஞ்சமலை. எறிந்தோன்= தூளாக்கிய முருகப்பிரான். தமிழ்க்குன்றில் பிறந்த குழந்தை மந்தாநிலம்= பொதிகைமலையில் பிறந்த குழந்தை தென்றல். கொம்பு= பூங்கொம்பு. முன்றில்= முற்றத்தில். பிறந்தவள்= தோன்றிய அருள்தரு உலகம்மை. கங்காதர மூர்த்தி இடம் ஒன்றில்= சிவபிரானின் இடப்பாத்தில். குடியாய் உறைந்தனளே= நிலைத்த வாழ்விடமாக வாழ்கிறாள்.

**பொழிப்புரை** : இமயத்தில்மலர்க்கொம்பு ஒத்த மகளிர்வாழ் வீட்டு முற்றத்தில் தோன்றியவளும், கிரௌஞ்ச மலையைத் துளாக்கிய அருள்தரு முருகப்பிரானை ஈன்றஎன்தாயும் ஆகிய அருள்தரு உலகம்மை. மலையாகிய பொதிகையில் தோன்றிய தென்றல் குழவியாய், சிங்கையில் கங்கையைச்சூடிய சிவபிரானின் இடப்பாகத்தில் சிறந்து விளங்கி, அதையே தன்நிலைத்த வாழிடமாகக் கொண்டு வாழ்கிறாள்.

**விளக்கம்** : முருகப்பிரான் கிரௌஞ்சமலையை எறிந்தது :

" குருகுபெயர்க் குன்றம் கொன்றான் " ( சிலம்பு. குன்றக்குரவை : 13.)

" தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே " ( கந்தர்கலிவெண்பா. கண்ணி 94 )

**இலக்கணக்குறிப்பு** : மந்த அநிலம்= மென்மையான காற்று - தென்றல் - காரணப்பெயர்.

63, **உறைக்கும் கனல்முத் தலைவேல் வலம்திரித்(து) ஊழிநிற்கும்**
**இறைக்கும் தெளிதற்கு எளியதன் றேஉல(கு) ஈன்றஅன்னை**
**நிறைக்கும் புவனம் திரோதாயி மாயையின் நின்(று))அழுந்த**
**மறைக்கும் திரும்ப வெளியாக்கும் இந்த மகத்துவமே.**

**குறிப்புரை** : உறைக்கும்= சுடும். வலம் திரித்து= வலமாகச்சுழற்றி. ஊழிநிற்கும் இறை - ஊழிக்காலத்திலும் நிலைத்த சிவபிரான். நிறைக்கும் புவனம்= அளவற்ற உலகங்கள். திரோதாயி மாயையில் நின்று அழுந்த= அம்மையின் மறைப்பாற்றல் மாயையில் பொருந்திச் செயற்பட. மறைக்கும்திரும்ப வெளியாக்கும்= மறைத்து மீண்டும் வெளிப்படுத்தும். மகத்துவம்= மேன்மை.

**பொழிப்புரை** : உலகங்களை ஈன்ற தாயாகிய அருள்தரு உலகம்மை, அளவற்ற உலகங்களைத் திரோதாசத்தியாய் மாயையில் பொருந்திச் செயற்பட, அதனால் அப்புவனஉயிர்களின் அறிவை மறைப்பதும் மீண்டும் வெளிப்படுத்துவதும் செய்யும் மேன்மையான செயல், சுடும்நெருப்பாகவிளங்கும் சூலத்தை வலமாகச்சுழற்றி, ஊழிகாலத்தும் நிலைத்த சிவபிரானாலும் அறிவதென்பது எளியதன்று.., அரியதாகும்.

**விளக்கம்** : பராசத்தியின் ஆற்றல் இருவகையில் செயற்படும் என்பது சைவமெய்ப்பொருளியல். அவை, பக்குவப்பட்ட உயிர்களுக்கு அருட்சத்தியாய் இருந்து வீடுபேறளிப்பதும், பக்குவம் பெறவேண்டிய உயிர்கள் பக்குவம்பெறும் பொருட்டு மாயையில் பொருந்தி, அவைகளின் முன்னனுபவங்களை மறைத்து, மீண்டும் பிறந்து பக்குவம்பெறச் செய்வதுமாகும். இவ்விருசெயற்பாடுகளும் சிவபிரானாலும் அறிதற்கு அரியதாம் என்றார்.

63. **மகமும் தவமும் பயில்மலை யாசல வாணனெம்கோன்**
**அகமும் புறமும் நிறைந்திருப் பாய்பொருள் ஆர்ச்சிதமும்**
**சுகமும் பெறுகிலன் பொய்வாழ்(வு)இ(து) என்று துறந்தும்உய்யேன்**
**இகமும் பரமும் இழந்தேன் எனக்(கு)என் இனிப்பிழைப்பே.**

**குறிப்புரை** : மகம்= வேள்வி. மலையாசல வாணன்= மலைக்கண் வாழும்சிவபிரான். பொருள் ஆர்ச்சிதம்= பொருள்சம்பாதித்தல், அதனால் அடையும் சுகம், துறந்தும்= துறந்தபோதிலும் ஈடேறவில்லை. இகமும்பரமும்= இவ்வுலகநலனும் மேலுலக நலனும் இனி எனக்கு என்பிழைப்பு=. இனிநான் பிழைப்பது எப்படி.

**பொழிப்புரை** : வேள்வியும் தவமும் மிகநடக்கும் பொதிகைமலை வாழ்சிவபிரானாகிய எம்தலைவனின் மனத்துள்ளும் புறத்தேயும் நிறைந்தவளே! பொருளைச் சம்பாதித்தல், அதனால்இன்புறுதல் ஆகிய இரண்டும் நான்பெறவில்லை. இவ்வாழ்வு பொய்யானது என்று பொருளையும் இன்பத்தையும் துறந்ததனால் இம்மை இன்பமும் மறுமை இன்பமும் இழந்தேன். தாயே! இனி எவ்வாறு பிழைப்பேன்.

**விளக்கம்** : பொருள் சம்பாதித்தால் , இம்மை இன்பங்களும், பொருளை ஈத்துவப்பதால் இம்மை மறுமை இன்பமும் வாய்க்கும். பொருளைத் துறந்ததால் இருமை இன்பங்களையும் இழந்தேன்என்றார். இதனை வலியுறுத்துவன;

" முனிவரும் மன்னரும் முன்னுவபொன் னாமுடியும் " ( திருக்கோவையார்.332 )

" வடுவிலா வைத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்
நடுவணது எய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர் " ( நாலடியார். மெய்ம்மை. 4 )

என்ற அனுபவமொழிகள்

அம்மை படைப்பு முதலிய முத்தொழில் புரியுங்கால் சிவபிரானின்புறத்து இருத்தல், ஊழியில் சிவபிரானின் அகத்திருத்தல் ஆகிய இருநிலைகளையும்முறையே ஸ்ரீ குமரகுருபர் மீ . பி தமிழில் ;

புறத்திருத்தல் : " பிறைமௌலிப் பெம்மான் முக்கட் சுடர்க்குஇடு நல்விருந்தே " ( 63 ).

அகத்திருத்தல் : ": புவனம் கடந்த ஒருவன் திருஉள்ளத்தில் அழகு ஒழுக
எழுதிபார்த்து இருக்கும் உயிர் ஓவியமே " ( 62 )

என்று அம்மையின் இருநிலைகளையும்குறிக்கிறார்.

64. **பிழைத்தேன் இதுவரை பொய்யொடு மெய்யும் பிதற்றிஒன்றோ**
**இழைத்தேன் வினைமட்(டு) இலக்(கு)இலை யேஎளி யேன்நரகத்(து)**
**உழைத்தேன் விடிவ(து)உண் டோநின் கருணைஉண் டாகில்உண்டாம்**
**அழைத்தேன் அளகத்(து) உலகே பிடிப்பது மாத்திரமே..**

**குறிப்புரை** : பிழைத்தேன்= வாழ்ந்தேன். வினைஒன்றோ இழைத்தேன்= இருவினைகளும் செய்தேன். இலக்கு இல்= முடிவில்லை. நரகத்து உழைத்தேன்= நரகம் அடைய உழைத்தேன். விடிவது= நற்காலம். நின்கருணை உண்டாகில் உண்டாம்= உனது கருணை உண்டு என்றால் விடிவதும் உண்டு. அளகத்து உலகே= நெருக்கமுடைய உலகம்மையே. பிடிப்பது மாத்திரமேஅழைத்தேன்= உன்திருவடிகளைப் பற்றிக்கொள்ளவே அழைத்தேன்.

**பொழிப்புரை** : இதுவரை பொய்யும் மெய்யும் பலவாறு சொல்லி வாழ்ந்தேன். நான்செய்த வினைகள் அளவற்றன. அற்பனாகியநான் நரகடையும்பொருட்டு உழைத்தேன். எனக்கு விடிவுகாலம் உண்டோ! அது உன்கருணை இருக்குமானால் மட்டுமே உண்டு. என்மேல் நெருக்கமான அருள்புரியும் அருள்தரு உலகம்மையே! உன்திருவடிகளைப் பற்றிக்கொள்ளவே அழைத்தேன். அருள்கூர்ந்து வருக; விடிவுகாலம் தருக.

65. **திரம்போல் உடலை நினைத்(து)இரை தேடித் திரிந்துநச்சு**
**மரம்போல் நெடுக வளர்ந்திருப் பார்புன் மனையில்ஒரு**
**தரம்போல் இரண்டு தரம்நடந் தால்வைது தள்ளுவர்என்**
**தரம்போல் என்நெஞ்சை உலகே கவலை அறுக்கின்றதே.**

**குறிப்புரை** : திரம்= நிலையானது. புன்மனையில்= அற்பர்வீடு. என்தரம்= என்பக்குவம்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! உடம்பை நிலையானது என்று நினைத்து உணவு தேடித் திரிந்து, நச்சுமரம்போல் செழித்துவளர்ந்த அற்பரின் வீட்டுக்கு ஒருமுறைபோல் மறுமுறை சென்றால் என்னை வைது வெளியேற்றுவர். என்பக்குவமில்லாத மனத்தைப்போல கவலையும் என்னைக்கொல்கிறது. அருள்புரிக.

**விளக்கம்** : நச்சுமரம் நிலவளத்தை உறிஞ்சி நச்சுத்தன்மை மேன்மேல்மிகத், தான்வளர்வதால் யாராலும் விரும்பப்படாதது. இதனை;

" நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று ". என்பார் பொய்யாமொழியார்..

இரைதேடித் திரிந்த இழிவும், பிறர் வைது தள்ளிய செயலும் நெஞ்சைஅறுக்கின்றன என்றார். இவை இரண்டில் முன்னது என்னாலும், பின்னது என்செயலால்பிறராலும் அமைந்தன. இரம்பம் முன்செல்வதும் பின்வருவதும் ஆகிய இருநிலைகளிலும் அறுப்பதுபோல் இவை இரண்டும் அறுக்கின்றன என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

66. **அறுத்துப் பொருப்பைப் பிளந்(து)ஓர் பொருநை அருவிபைங்கோங்(கு)**
**இறுத்துப் புறப்பட்(டு) இறங்குதண் சாரல் இடத்துநின்று**
**பொறுத்துச் சிவந்தநின் பொன்தாட்(கு) புகுந்த(து)அம்மே**
**மறுத்துப் பிறப்பில்லை என்றுநன் றாஎன் மனத்(து)எண்ணியே.**

**குறிப்புரை** : பொருப்பை அறுத்துப் பிளந்து என்க. பொருப்பை= பொதிகைமலையை. பைங்கோங்கு இறுத்து= வளமான கோங்கமரத்தை ஒடித்து. பொறுத்து நின்ற= பொறுமையுடன்நின்றதால். பொன்தாள்= அழகியதிருவடி. புகுந்தது= அடைக்கலம்புகுந்த காரணம். மறுத்து= மீண்டும்.

**பொழிப்புரை** : பொதிகைமலையைத் தனது நீரோட்டத்தால் அறுத்துப்பிளந்துகொண்டு,வளமான கோங்கமரத்தை ஒடித்துத் தள்ளி வந்து இறங்கும் தண்ணியசாரலில் - சிங்கையில் - பொறுமையுடன் நின்றதால் சிவந்த உனது அழகிய திருவடிகளை அடைக்கலமாகப் புகுந்தது, இனிமீண்டும் பிறப்புஇல்லை என்பதைநன்றாக என்மனத்தில் எண்ணியேயாகும். என்நோக்கத்தை நிறைவேற்றியருள்க.

67. **எண்ணத்தி லேஉண்மை எண்ணாமல் வேதம் எடுத்துச்சொன்ன**
**வண்ணத்தி லேஎன் மனம்வைத்தி லேன்கொங்கை வள்ளத்துப்பால்**
**கிண்ணத்தி லேசைவக் கன்றுக்கு வார்த்தவள் கீர்த்திஎல்லாம்**
**அண்ணத்தி லேநின்(று)அமு(து) ஊறப்பா டிக்கொண்டாடிலனே.**

**குறிப்புரை** : உண்மை= மெய்ஞ்ஞானம். சொன்னவண்ணம்= சொன்னபடி. கொங்கைப்பால்= திருமுலைப்பால். வள்ளத்துக்கிண்ணம் = உண்கலமாகிய பொற்கிண்ணம். சைவக்கன்று= திருஞானசம்பந்தர். அண்ணம்= உள்நாக்கு.

**பொழிப்புரை** : என்எண்ணத்தில் உண்மை ஞானத்தை நினைக்காமலும், வேதம் உயர்வாகச் சொன்னபடி நான்என்மனத்தை வைக்காமலும் வாழ்ந்தேன். பொன்னாலான உண்கலமாகிய கிண்ணத்தில் தனது திருமுலைப்பால் வார்த்துத் திருஞானசம்பந்தர்க்கு தந்தவளாகிய உனது புகழைஎல்லாம், என் உள்நாக்கில் வைத்து அமுதமூறப்பாடிக்கொண்டாடவில்லை. என்செய்வேன்!

**விளக்கம்** : அண்ணத்தி வைத்துப் பாடுதலாவது உண்மைசொல்லிப்பாடுதல். திருஞானசம்பந்தரை உயர்த்திப்பாடினால் தான் மரியாதை என்ற வல்லாண்மையுடைய காலத்தில், பிறர்போல் அவரை முருகனாகப்பாடாமல், அவர்க்கு வாய்த்த அரிய அருள்நிலையைப் போற்றியுள்ளமை எண்ணுக

68. **ஆடிச் சிவந்த பதத்தார் பவளச் சடாடவிபட்(டு)**
**ஓடிச் சிவந்த சரோருகத் தாள்என் உல(கு)இருதாள்**
**சூடிச் சிவந்த தலையும்எக் காலமும் தோத்திரங்கள்**
**பாடிச் சிவந்த கவிநாவும் பெற்ற(து)என் பாக்கியமே.**

**குறிப்புரை** : ஆடி= ஆனந்தக் கூத்தாடி. சடாடவி= சடைக்காடு. ஓடி= பரந்து. சரோருகம்= தாமரை மலர். கவிபாடிச் சிவந்தநா என்க

**பொழிப்புரை** : ஆனந்தக் கூத்தாடிச் சிவந்த திருவடியுடைய சிவபிரானின் பவளநிறத்துச் சடைக்காடு பரந்துபட்டதால், தாமரைமலர்போன்ற திருவடி சிவந்தவளாகிய அருள்தரு உலகம்மையின் இருதிருவடிகளைச் சூடியதால் சிவந்த தலையும்; எந்நேரமும் அவளைப் போற்றிக்கவிபாடியதால் சிவந்த நாவும் பெற்றது நான்பெற்றபேறுஆகும்.

. **இலக்கணக்குறிப்பு** : சரோருகத்தாள் - உவமைத்தொகை..தலையும் நாவும் - எண்ணும்மைகள்-

69. **பாக்கியம் ஆவ(து) உலகேஉன் பங்கய பாதம்எண்ணும்**
**யோக்கிய வான்என ஓங்கிய வாழ்(வுஎன்(று) ஒருபிடியாய்**
**வாக்கிய வேத வழிநட வாமல் மயங்கிமலம்**
**தேக்கிய தீவினைக் குள்ளே மனம்சென்று சிக்கியதே.**

**குறிப்புரை** : பாக்கியம்= செல்வம். பங்கயபாதம்= தாமரைஒத்த திருவடி. எண்ணும்= நினைக்கின்ற. ஒருபிடியாய்= பிடித்தபிடியாக. மலம் தேக்கிய வினை= மும்மலங்கலால் மிகச்சேர்த்த வினைகள்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! செல்வமாக விளங்கும் உனது தாமரைமலர் ஒத்த திருவடிகளையே எண்ணுகிற யோக்கியன் என்றுகூறும் வாழ்வைப் பிடித்தபிடியுடன்நின்று, வேதம்கூறும் வழியில் நடக்காமல் மனம் மயங்கி, மும்மலங்களால் மிகச்சேர்த்த தீவினைக்கண் என்மனம்போய்ச் சிக்கிக்கொண்டது. விடுவித்தருள்.

**இலக்கணக்குறிப்பு** : பங்கய பாதம் - உவமைத்தொகை.

70. **சிக்கென்ற கொங்கை உலகேமெல் என்று சிவந்தபதத்**
**துக்(கு)என்று வந்து தொழும்புசெய் வேன்அறம் தோற்றவெறும்**
**பொக்கென்ற வாவிப் புலால்மீனுக்(கு) ஏயப் புனல்மடைவாய்க்**
**கொக்(கு)என்(று) நின்று குறிக்கின்ற(து) அற்றால்வெம் கூற்றம்ஒன்றே.**

**குறிப்புரை** : சிக்கென்ற= அழகான. மெல்லென்று சிவந்த= மென்மையானதும் செந்நிறமுடையதும். பதம்= திருவடி. அறம்தோற்றத் தொழும்பு செய்வேன்= அறம்விளங்க அடிமைப்பணிசெய்வேன். ஏய= போல. வாவிப்புனல் மீனுக்கு புனல் மடைவாய் பொக்கென்ற கொக்கு என்றுநின்று அற்றால் வெம்கூற்றமொன்று குறிக்கின்றது என்க. வாவிப்புனல் வெறும் மீன்= குளத்துநீரில் வாழும் அற்பமீன். மடைவாய்= மடைக்கண். பொக்கென்ற கொக்கென்று ஏய நின்று= திடீரென்று கொத்திப்பிடிக்கும் கொக்குப்போல் காத்திருந்து. குறிக்கின்றது= என்னைக்குறித்துக் காத்து நிற்கிறது.

**பொழிப்புரை** : குளத்துநீரில் வாழும் அற்பப் புலாலுடைய மீனுக்காக, நீரோடும் மடைக்கண் திடீரென்று கொத்திப்பிடிக்கும் கொக்குப்போல் கொடிய யமன் என்றஒன்று என்னைப்பிடிக்கக் காத்திருக்கின்றது. . ஆயினும் அழகிய கொங்கைகளுடைய அருள்தரு உலகம்மையே! உனது மென்மையானதும் சிவந்ததும் ஆகிய திருவடிகள்பொருட்டு வந்து அறம்விளங்க உனக்கு அடிமைப்பணி செய்வேன்,

**விளக்கம்** : மீன்பொருட்டுக் காத்திருக்கும் கொக்கு :

" கொக்கு ஒக்கக் கூம்பும் பருவத்து மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த இடத்து. ( தமிழ்மறை 490 )
" அடக்கம் உடையார் அறிவிலர் என்று எண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு, ( மூதுரை 16 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

71. **ஒன்று மலச்சடம் ஒன்பது பீறல்அவ் ஒன்பதினும்**
**நின்று மலச்செடி நாறும்எந் நேரமும் நீர்விட்(டு) அன்றைக்(கு)**
**அன்று துடைப்பினும் தீராது பாழ்த்த அருவருப்பு**
**என்று தவிர்ப்ப(து) உலகே நரகம்இதி னும்நன்றே.**

**குறிப்புரை** : மலச்சடம்= அழுக்குமயமான உடம்பு. பீறல்= பொத்தல்.செடி= துர்நாற்றம். அன்றைக்கு அன்று= அன்று அன்று. தீராது= நாற்றம் போகாது. பாழ்த்த அருவருப்பு= பாழாக்கும் வெறுப்புடையது. தவிர்ப்பது= மிகக்கருதிப்பேணாமல் விலக்கல்.

**பொழிப்புரை** : அழுக்குமயமான உடம்பு ஒன்று, அதில் ஒன்பது துளைகள், அந்தஒன்பதிலிருந்தும் அழுக்குத் துர்நாற்றம் எந்நேரமும்வீசும், அன்றன்று அந்த அழுக்கைத் துடைத்தாலும் அழுக்கு ஒழியாது, பாழாக்கும் அருவருப்புடையது. இவ்வுடம்பை விட்டு வீடுபெறுவது எந்நாளில் ? இந்த உடம்பில் வாழ்வதைக்காட்டிலும் நரகம் நல்லதாகும்.

**விளக்கம்** : இச்செய்யுள் கூறும் உடம்புபற்றிய கருத்துகள் மறுக்கவியலாதன. ஆயினும் ஆதியில் உற்று அறியும் உடம்புடைய உயிர், ஆறறிவு உடைய மனிதனாக வளர்ந்ததும், எல்லையில்லாமல் வளர்ந்து கொண்டே செல்லும் விண்ணை அளந்துகொண்டிருப்பதும் இவ்வுடம்பில் ஒளிரும் அறிவால்தான். உடம்பின் ஒப்பற்ற இச்சிறப்பைத் திருமூலர்,

" உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே. ( 724. )

எனவே,உலகில் உள்ள எதிலும் குணமும் உண்டு, குற்றமும் உண்டு. " குணம் நாடிக் குற்றமும் நாடி " என்பது அருமைக்குறள். குற்றத்தை விலக்கிக் குணத்தைப் பெருக்கி வளர்ந்து, நம்மையும் வளர்க்கும் இவரோடொத்த சான்றோர் வாழ்வு, உடம்பை வளர்க்கும் **உபாயமறிந்து வளர்ப்பதுடன்** நம்மையும் வழிநடத்தும்.

இங்கு இவர்கள் உடம்பை இழித்துக்கூறியது இழிந்த உடம்பின்மூலம் உயர்நிலையாம் "வீடுபெறநில்" என்பதை உணர்த்தவேயாகும் என்பதை " என்றுதவிர்ப்பது " என்ற சொல்லாட்சி உணர்த்துகிறது.

72. **நன்றாய் முடிந்த(து) அடியேன் சரித்திரம் நான்செய்பிழை**
**ஒன்(று)ஆயி ரம்பதி னாயிர மாய்ஒரு மிக்கஒரு**
**குன்றாய் முடிந்தது கொல்லோ இனிது குடிஎன்றுபோய்**
**நின்றாய் ஒதுங்க உலகே பொதிய நிழலுக்குள்ளே.**

**குறிப்புரை** : ஒருமிக்க= ஒருசேர. இனிது குடி= இனிமையாக அப்பிழைகளின் பயனை அனுபவி. ஒதுங்க நின்றாய்= என்னைவிட்டு ஒதுங்கி எழுந்தருளினாய்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே ! என்வாழ்க்கை எப்படியோ நிறைவுபெற்றது. இதுவரை நான் செய்த பிழைகள் எல்லாம் திரண்டு குன்றாக ஆனதோ!. இனிமேல்" நீ போய் அக்குன்றின் பயன்களை அனுபவி "என்று, ஒதுங்கிப் பொதிகை மலைத்திருக்கோயிலுள் போய்நிலைத்தாய். என்செய்வேன்!

**இலக்கணக்குறிப்பு** : கொல்லோ- ஐய இடைச்சொல்.

73. **நிழலும் குளிர்ச்சியும் நீங்காப் பொருநை நெடுந்துறையான்**
**அழலும் பசித்தழல் ஆற்றும்என் னா(து)அதை ஆதரித்(து)இங்(கு)**
**உழலும் கருத்தும் இழைநூலைப் பா(வு)இழைக்(கு) ஊடுசெய்யும்**
**குழலும் பயிற்சியும் ஒன்றுநன் றாம்என் குணகதியே.**

**குறிப்புரை** : அழலும்= சுடும். உழலும்கருத்து= இவ்வுலகில் துன்புறும் கருத்து. இழைநூல்= ஊடைநூல். பாவு இழைக்கு ஊடுசெய்யும்= பாவுஆக நீட்டிய நூலின் இடையே செலுத்தும். குழல்= நெய்யும்தறியில் உள்ளஓடக்குழல். பயிற்சி= இடையறாது செல்லுதல். குணகதி= குணத்தின் செயல்.

**பொழிப்புரை** : இருபுறத்துமுள்ள சோலைகளால் நிழலும் குளிர்ச்சியுமுடைய பொருநைப் பேராற்றின் நீண்டகரையில் வாழும் அருள்தரு கல்யாணசுந்தரர்ஆகிய பாவநாசனார், என் சுடும்பசித் துன்பத்தை ஆற்றுவார் என்றுகருதாமல், இவ்வுலகில் துன்புறும் கருத்துடன், தறியில் பாவு நூலுக்கு ஊடே இழைநூலைச் செலுத்தி இருபுறமும் அலைகின்ற ஓடக்குழல்போல் அலையும் என்குணத்தின் நடைமுறை - செயல், நன்று.

**விளக்கம்** : நெய்யும் தறியில் இழுத்துக்கட்டிய பாவுநூலுக்கிடையே இருபுறமும் இடையறாது ஓடி ஊடுநூலை நிரப்பும் ஓடக்குழாய்போல் உள்ளது என்குணத்தின் நடைமுறை என்றார். வாழ்க்கையைப்

பாவுநூலாகவும், இடம்வலம் அலையும் ஓடத்தின் செயலைத் தன் இடையறாச்செயலாகவும், ஓடத்தின் அலைச்சலால் விளையும் நெசவை வினைப்பயனாகவும் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : நன்று= இகழ்ச்சிக்குறிப்பு. இச்செய்யுள் உவமையணி.

74. **கதிகாட்டி என்னைப் புரப்பாள் கருணையும் காட்டிநல்ல**
**மதிகாட்டி உண்மை வழிகாட்டித் தன்மண வாளருக்குச்**
**சதிகாட்டி ஒக்கநின்று ஆட்டுவித் தாள்இத் தனைஉலக**
**விதிகாட்டி னள்அங்(கு) இதைக்காட்டில் பே(று)இனி வே(று)இல்லையே.**

**குறிப்புரை** : கதி= வாழ்க்கை முறை. மதி= அறிவு. உண்மைவழி= ஞானத்துக்குரியவழி. சதிகட்டி= தக்க மனைவியாக விளங்கி. ஒக்கநின்று= கருத்துடன் ஒத்துவாழ்ந்து. ஆட்டுவித்தாள்= இயக்கினாள். விதி= ஒழுக்கமுறை. அங்கு= அவ்விடத்திலேயே. காட்டில்= காட்டிலும்.

**பொழிப்புரை** : வாழ்க்கைமுறையைக்காட்டி என்னைக் காக்கின்றவள், அதனுடன்கருணையும் காட்டி, நல்லறிவும் தந்து, ஞானத்துக்குரிய வழியும்காட்டி, அனைத்து உலகங்களுக்கும் ஒழுக்கமுறை காட்டி, தன்கணவனாகிய சிவபிரானுக்குத் தக்கமனைவியாய் அங்கு நடந்து, என்னை இயக்கினாள். இதைவிட நான் அடையத்தக்க நன்மை வேறுஇல்லை. .

**விளக்கம்** : சிவபிரான் திருவுள்ளம் அனைத்து உயிர்களும் ஈடேற - வீடுபேறு பெறவேண்டும் என்பது. அம்மையின் நடைமுறை அதற்கு ஏற்பவுள்ளதால் சதிகாட்டி - நன்மனைவியாய்ப் விளங்கி என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இல்லை - இருதிணை ஐம்பால் மூவிடப்பொதுவினை.

75. **இல்லதும் உள்ளதும் நீஅறிவாய் உலகே வினைதான்**
**வல்லது செய்யினும் மற்(று)அது நீஉன் மனம்பொறுத்து**
**நல்லது செய்வது உனக்கேபுகழ் தொண்டன்நான் உன்சித்தம்**
**அல்லது பின்னை அறியேன் உரைத்(து)என்ன ஆவதுவே.**

**குறிப்புரை** : இல்லதும் உள்ளதும்= என்மனத்தில் உள்ளதும் இல்லாததும். வினை= ஊழ். வல்லது= கொடுமை. பொறுத்து= தாங்கிக்கொண்டு. சித்தம்= மனம். உரைத்து என்னஆவது= சொல்லிப்பயன் என்ன - பயனில்லை.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! என்மனத்தில் உள்ளதையும், இல்லாததையும் நீ அறிவாய். என்னூழ்வினை எனக்குக் கொடுமை செய்தாலும் அதனைநீ பொறுத்துக்கொண்டு நல்லதே செய்வது உனக்குப்புகழ்தரும். நான் உன்தொண்டன். உன் அருள்மனநிலை தவிர வேறு நானறியேன். இதனை உன்னிடம் சொல்லிப் பயனில்லை. நீயறிவாய்.

76. **ஆவதும் ஓர்பொருள் ஆகா ததும்உல கம்மமண்மேல்**
. **சாவதும் மாறிச் சனிப்பதும் ஊரும் சகடமென்னப்**
**போவதும் மீள்வதும் எல்லாம்உன் சித்திரம் புன்மையன்றோ**
**நோவதும் ஏழை உகப்பதும் வேறு நுவல்வதுமே.**

**குறிப்புரை** : ஆவது= கிடைப்பது. சனிப்பது= பிறப்பது. ஊரும் சகடம்= உருண்டு செல்லும் சக்கரம். சித்திரம்= இரகரியம். ஏழை உகப்பதும் நோவதும் வேறு நுவல்வதும் புன்மையன்றோ= கீழானநான் வருந்துவதும் மகிழ்வதும் ஏதேனும் வேறொன்று சொல்வதும் என்அற்பச்செயலாகுமல்லவா!

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! உலகில் ஒருபொருள் கிடைப்பதும், கிடைக்காததும், இறப்பதும் மீண்டும் பிறப்பதும், உருண்டுசெல்லும் சக்கரம்போல, என்னைவிட்டுப் போவதும் மீண்டும் வருவதும் ஆகிய அனைத்தும் உன்இரகசியச் செயல். எனவே கீழானநான் வருந்துவதும் மகிழ்வதும், இவற்றுக்கு வேறானதொன்று கூறுவதும் என்அற்பச்செயலாகுமல்லவா!

**விளக்கம்** : இவர் பிறப்பு இறப்புச் சுழற்சிக்கு உருண்டுசெல்லும் சக்கரத்தை உவமை கூறினார். நாலடியார், செல்வம் நிலையாமைக்குச் சக்கரச்சுழற்சியை உவமை கூறியுள்ளது. அது;

" துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ(டு) உண்க
அகடுற யர்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்" . . ( செல்வம் நிலையாமை. 2 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

77. **வதுவைத் திருமுன்றில் பந்தரின்கீழ் அம்மிவைத்து அதன்மேல்
விதுவைப் புனைதொங்கல் வேணிப் பிரான்வைத்த மென்மலர்த்தாள்
அதுவைப்(பு) எனஎண்ண மாட்டாமல் போய்க்கழு(கு) ஆதிஉண்ணும்
பொதுவைப் பொருள்என்(று) உலகே இரைஇட்டுப் போற்றுவனே**.

**குறிப்புரை** : வதுவை= திருமணம். விது= பிறை. தொங்கல்= மாலை. வேணி= சடை. மென்மலர்த்தாள் அது= உனது மென்மையான மலரொத்த திருவடி. வைப்பு என எண்ண மாட்டாமல்= வைக்கப்பட உடம்பு என்று எண்ணாமல். கழுகு ஆதிபோய் உண்ணும்= கழுகுமுதலியன கொத்தித் தின்னும். பொதுவை= உடம்பை. பொருளென்று= செல்வமென்று. இரையிட்டு= உணவுதந்து.

**பொழிப்புரை** : திருமணம் நடைபெறும் முற்றத்துப் பந்தரின்கீழ், அம்மியை வைத்து, அந்த அம்மியின் மேல், , பிறையுடன், தொடுக்கப்பட்ட மாலையணிந்தவனும், சடையுடையவனுமாகிய சிவபிரான் உன்மென்மையான மலரொத்த திருவடியை வைத்தான். அத்திருவடியை எனக்குச் சூட்டப்பட்டசெல்வம் என்று எனது உடம்பை எண்ணாமல், கழுகு முதலியனபோய்க் கொத்தித் தின்னும் உடம்பு என்று உடம்புக்கு உணவிட்டுப் போற்றுகிறேன்.

**விளக்கம்** : கோவலன் கண்ணகி திருமணமும் " நீல விதானத்து நித்திலப்பூம்பந்தர்க்கீழ் " நடந்தது என்று சிலம்பு கூறும். இன்றுபோல் அன்று திருமண மண்டபங்கள் இல்லையாதலின் அனைவரும் இருந்து காணப் பெரியபந்தர்க்கீழ் திருமணம் நடந்தது என்க.

78. **போற்று வணங்கும் உலகாளைத் தென்னம் பொருப்(பு)ஒருபால்
நாற்று நிரம்பி நடைகாவும் பாய்ந்து நறுங்கனிச்சா(று)
ஊற்று வளம்கெழு தென்பால் களாநிழல் உள்பொருநை
ஆற்று நெடுந்துறை மேல்இருப்பாள் செம்பொன் ஆலயத்தே**.

**குறிப்புரை** : போற்று வணங்கும்= போற்றுதலுடன் வணங்கும். தென்னம்பொருப்பு= பொதிகைமலை. நறுங்கனிச்சாறு நாற்று நிரம்பி= மணக்கும் பழச்சாறு நாற்றுவயலில் நிரம்பி. நடைகா= வளமான சோலை. ஊற்றுவளம்கெழு= ஊற்றுவளம்பொருந்திய. தென்பால்= தெற்கே. நெடுந்துறைமேல்= நீண்டகரையில். களாநிழல் கீழ்= முக்களாமரநிழலில். செம்பொன்= சிறந்த அழகிய. தென்னம்பொருப்பு ..........நெடுந்துறைமேல் செம்பொன் ஆலயத்தே இருப்பாள் உலகாளைப் போற்று வணங்கும் என்க.

. **பொழிப்புரை** : பொதிகைமலையின் ஒருபக்கம், மணக்கும் கனிகளின்சாறு, நாற்றுடைய வயலில் நிரம்பி, வளமான சோலையிலும் பாய்ந்து, அதன்ஊற்றுபொருந்திய தென்பகுதியில், பொருநையாற்றின் நீண்டதுறைக்கணுள்ள அழகிய ஆலயத்து முக்களாமரநிழலில் எழுந்தருளியுள்ள அருள்தரு உலகம்மையை நாம் போற்றுதலுடன் வணங்குவோம்.

**இலக்கணக்குறிப்பு** : வணங்கும் - தன்மைப்பன்மை வினைமுற்று.

79. **ஆலயம் போ(து)என்(று) இருந்தார் வணங்(கு)உல கம்மையைநான்**
**காலையம் போதும் பகல்போதும் பானுக் கதிர்அழுங்கும்**
**மாலையம் போதும் தொழுவேன் எனக்(கு)இது மாத்திரமே**
**வேலைஅம் போதனுக்(கு) எம்பொருட் டால்இல்லை வேலையுமே.**

**குறிப்புரை** : ஆலயம் போதுஎன்று இருந்தார்= தமக்குரிய ஆலயமாக வெண்டாமரை செந்தாமரை மலர்களைக்கொண்ட கலைமகள் திருமகள். போது= பொழுது. பானுக்கதிர் அழுங்கும்= சூரியஒளி மங்கும். அம்போதன்= அழகிய தாமரைமலரிலுள்ள நான்முகன். வேலையும் இல்லை= படைப்புத்தொழில் இல்லை.

**பொழிப்புரை** : தமக்குரிய ஆலயமாக வெண்டாமரை செந்தாமரை மலர்களைக்கொண்ட கலைமகள் திருமகள் முதலியோர் வணங்கும் அருள்தரு உலகம்மையை, நான் அழகிய காலை, நண்பகல், கதிரோன் சாயும் மாலை என்று முப்போதும்வணங்குவேன். எனக்கு இது ஒன்றுதான் வேலை. இதனால் அம்மையின் திருவடிஅடைவேன். ஆகவே தாமரைமலரிலுள்ள நான்முகனுக்கு என்னைப்படைக்கும் வேலை இல்லை.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

80. **வேலை எடுத்துப் பொருப்(பு)எறிந் தோன்அம்மை மென்கமலக்**
**காலை எடுத்துக் கருத்துள்வைத் தேனில்லை கல்வியின்சொல்**
**மாலை எடுத்துப் புனையேன்என் சொல்வ(து)அம் மாஅவதி**
**ஓலை எடுத்துப் புறப்படும் கூற்றுக்(கு) உரைஎடுத்தே.**

**குறிப்புரை** : பொருப்பு= கிரௌஞ்சமலை. அம்மை= தாய். கருத்துள்= மனத்தில். சொல்மாலை= சொல்மலரால் தொடுக்கப்பெற்ற பாமாலை. அவதி= கணக்கு. உரைஎடுத்து என்சொல்வது= சொல்லத்தொடங்கி என்னசொல்வது.

**பொழிப்புரை** : வேலினை எறிந்து கிரௌஞ்ச மலைதூளாக எறிந்த அருள்தரு முருகப்பிரான் தாயே! உனது மென்மையான தாமரைமலர்போன்ற திருவடிகளை என்மனத்தில் வைக்கவில்லை.; கற்ற கல்வியால் சொல்மலரால் தொடுக்கப்பெறும் பாமாலையை உன்மேல் தொடுக்கவில்லை; தாயே! என்வாழ்க்கைக்கணக்கு எழுதிய ஓலையுடன் வரும் கூற்றுவனுக்கு என்னசொல்வது!

**விளக்கம்** : வாழ்க்கைக்கணக்கு ஓலை:

" தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் ராரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே. " ( அப்பரடிகள். திருஇன்னம்பர் )

81. **எடுத்த பிறப்பில் கதிபெற வேண்டில் எறிதிரைநீர்**
**மடுத்த முனிக்கு மணக்கோலம் காட்டி மலையமலைக்(கு)**
**அடுத்த தலத்தில் இருந்தாள்என் அம்மை அவளைவெம்மை**
**கொடுத்த பசிக்(கு)உயிர் வெம்பிடுவீர் சென்று கும்பிடுமே.**

**குறிப்புரை** : கதி= நற்கதி - வீடுபேறு. எறிதிரைநீர்= அலைஎறியும் நீருடைய கடல். மடுத்த= பருகிய. முனி= அகத்தியர். மலையமலை= பொதிகைமலை. வெம்மை கொடுத்த பசி= ஆசைகொடுத்த பசியாகிய பொருளீட்டல். வெம்புதல்= அழிதல்.

**பொழிப்புரை** : ஆசைகொடுத்த பசியாகிய பொருளீட்டலில் உயிர் அழிகின்றவர்களே! பிறந்த இப்பிறப்பிலேயே வீடுபேறு பெறவிரும்பினால், அலைஎறியும் நீருடைய கடலினைப் பருகிய அகத்திய முனிவர்க்குத் தன்மணக்கோலம் காட்டியபின், இந்த பொதிகைமலையை அடுத்த விக்ரமசிங்கபுரத்தில் இருக்கின்றவளும் என்தாயுமாகிய அவளைச்சென்றடைந்து வணங்குங்கள்.

**விளக்கம்** : பொருளீட்டலைக் குறியாகக் கொண்டோரின் ஆசை, ஈட்டஈட்டப் பெருகுமேதவிர, தீர்வதில்லையாதலின் தீராதபசியாக உருவகித்தார். பொருளீட்டலில் கொண்ட பேராசையை உலகெங்கும் காணலாம்

**இலக்கணக்குறிப்பு** : எறிதிரைநீர் - வினைத்தொகைபுறத்துப் பிறந்தஅன்மொழித்தொகை. இருந்தாள் - வினையாலணையும் பெயர். வெம்மைகொடுத்தபசி - உருவகம்.

82. **கும்பத்தில் வந்தவன் போற்(று)உல காள்பொன் குழைதடிந்து**
**விம்பத்தில் நின்று விளையாடும் கண்கள் விடக்குமரக்**
**கம்பத்(து) இருந்து வணங்காத பாவியைக் காத்துநல்ல**
**சம்பத்து நல்கி ஒழிப்ப(து)என் றோமனத் தாபத்தையே.**

**குறிப்புரை** : கும்பத்தில் வந்தவன்= குடத்தில் தோன்றிய அகத்தியர். பொன்குழை= பொன்னாலான காதணி. தடிந்து= மோதி. விம்பம்= ஒளி. கண்கள்= கண்களின் கருணை. விடக்குமரக்கம்பம்= மாமிசத்தால் ஆன மரத்தூண். இருந்து= கொண்டு. நல்ல சம்பத்து= நன்மையே தரும் செல்வம்.- வீடுபேறு. என்மனத்தாபத்தை ஒழிப்பது என்று= என்மனத்தாபம்= மனத்துன்பம் தீர்ப்பது எந்நாளில்.

**பொழிப்புரை** : அகத்திய முனிவர் போற்றுகிற அருள்தரு உலகம்மையின், பொன்னாலான காதணிகளை, மோதிவிளையாடும் கண்களின் கருணையை எண்ணி, மாமிசத்தால் ஆன மரத்தூணாகிய உடம்பில் இருந்துகொண்டு வணங்காத பாவியாகிய என்னைக் காத்து, நன்மையே தரும் செல்வமாகிய வீடுபேறு அருளி அதன்முலம் என்மனத்துன்பமாகிய பிறப்பினை ஒழிப்பது என்று!

**இலக்கணக்குறிப்பு** : கண்கள் - இடவாகுபெயர். விடக்கு மரக்கம்பம் - உருவகம்.

83. **தாபிக்கும் செய்கை தரும்உயிர் காக்கும் தகைமைநல்கும்**
**கோபிக்கும் தன்மை கொடுப்பிக்கும் மூ(து)அண்ட கோடிஎல்லாம்**
**நாபிக்குள் வந்தவன் முன்னோரைக் கொண்டுநடப் பிக்கும்வான்**
**சோபிக்கும் கண்கொண்(டு) உலகாள்என் பாசம் துடைப்பிக்குமே.**

**குறிப்புரை** : தாபிக்கும்= என்னை நிலைநிறுத்தும். தகைமை= நற்குணம். கோபிக்கும்= தீயவற்றை சினக்கும். மூது= முதுமையான. நாபிக்குள் வந்தவன்= திருமால் நாபியில் தோன்றிய பிரமன். முன்னோர்= பிரமனுக்கு முற்பட்டவர்களாகிய திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன். நடப்பிக்கும்= இயக்கும். வான்சோபிக்கும் கண்= மேலான ஒளியாகிய கருணை. துடைப்பிக்கும்= அகற்றும்.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மை, என்னை நன்னிலையில் நிறுத்தும் செயல்களை அருளும், என்னுயிர்காக்கும், நற்குணங்கள் அருளும், தீயவற்றைச் சினக்கும் குணம்உண்டாகச்செய்யும்,முதுமையான கோடிக்கணக்கான அண்டங்களை எல்லாம், திருமாலின் நாபியில்தோன்றிய பிரமனைக் கொண்டும், அவனுக்கு முற்பட்டவர்களாகிய திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகியோரைக் கொண்டும் ஐந்தொழிலைநடத்தும், மேலான ஒளியாகிய கருணையால் முப்பாசங்களும் அகலச்செய்யும்.

84. **துடைத்தா யிலைவன் கலிநோயை என்னைத் தொழும்புசெய்ய**
**படைத்தா யிலைவந்து பார்த்தா யிலைஉள்ளப் பள்ளத்தில்விட்(டு)**
**அடைத்தா யிலைஉன் கருணைப் பிரவாகத் தைஐ வரைவிட்(டு)**
**உடைத்தாய் உலகம்மை நன்றா யிலைஎன் உயிர்ப்பயிரே.**

**குறிப்புரை** : வன்கலிநோயைத் துடைத்தாய் இலை= கொடிய துன்பமாகிய நோயைஅழிக்கவில்லை. தொழும்பு= திருவடித்தொண்டு. உள்ளப் பள்ளத்தில் உன்கருணைப் பிரவாகத்தை அடைத்தாயிலை= என் மனமாகிய குழியில் உன்கருணப்பெருக்கை நிரப்பி அடைக்கவில்லை. ஐவரை விட்டு உடைத்தாய்=

ஐம்புலகள்மூலம் என்னுறுதியைத் துண்டாடினாய், என்னுயிர்ப்பயிர் நன்றாய் இலை= எனது உயிராகிய பயிர் வளரவில்லை.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! என்கொடிய துன்பமாகிய நோயை அழிக்கவில்லை; என்னை உன்திருவடிக்குத் தொண்டுசெய்யப் படைக்கவில்லை; என்னை வந்து பார்க்கவுமில்லை, உன்கருணைப் பெருவெள்ளத்தினை என்மனமாகிய குழியில் விட்டு வெளியேறாமல் அடைக்கவில்லை; ஐம்புலன்கள் மூலம் என்மனவுறுதியைத் துண்டாடினாய்; இவற்றால் என் உயிராகியபயிர் வளரவில்லை.

**இலக்கணக்குறிப்பு** : இலை - இடைக்குறை. கருணைப்பிரவாகம், உயிர்ப்பயிர் - உருவகங்கள். இச்செய்யுள். சொற்பொருள் பின்வருநிலையணி.

85. **பயிரிட்டு வேலி பிரிப்பவர் போல்இந்தப் பாழ்ப்பிறவிக்(கு)**
**உயிரிட்டு வாழ்(வு)ஒழித் தாய்உல கேபக டூர்திஎன்னைத்**
**தயிரிட்ட மத்தினைப் போல்அலைத் தால்அத் ததிமறிப்பேன்**
**அயிரிட்ட வேலை உல(கு)ஈன்ற நின்திரு ஆணையிட்டே.**

**குறிப்புரை** : உயிர் இட்டு= உயிரைத்தந்து. வாழ்வு= நலவாழ்க்கை. பகடூர்தி= எருமையை ஊர்தியாக உடைய யமன். தயிரிட்ட மத்து= தயிரில் சுழலஇட்ட மத்து. ததி மறிப்பேன்= அத்தயிரில் அழிவேன். அயிர் இட்ட= நுண்மணலை ஒதுக்கிய. வேலை= கடல் - கடல் சூழ் உலகு. ஆணை= சத்தியம்.

**பொழிப்புரை** : நுண்மணலைக் கரையில் ஒதுக்கும் கடல்சூழ் உலகை ஈன்றவளே! பயிரிட்டபின் அதற்குக் காவலாக இருக்கவேண்டிய வேலியைப் பிரித்தெறிந்தவர் போல், பாழான இப்பிறவிக்கு அனுப்பி, நல்வாழ்வை ஒழித்தாய். எருமை ஊர்தியுடைய யமன் என்னைத் தயிரில் இட்ட மத்துப்போல் அலைத்து வருத்தினால் அத்தயிரில் - அவ்வலைப்பு வருத்தத்தில் அழிவேன். இது உன்மேல்சத்தியமாகும்.

**விளக்கம்** : பயிரிடல் - உயிரை உலகில் பிறக்கச்செய்தல். வேலிபிரித்தல் - பாதுகாப்புடன் கூடிய நல்வாழ்வை அழித்தல். மத்துஇடல் - மிகவருத்துதல்.

**இல்க்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் இருஉவமையணிகள் உள.

86. **இட்டம் பிறி(து)இங்(கு)இல் லைஉல கேஎனக்(கு) இந்திரனார்**
**பட்டம் பெறுவது பாரம்அன் றேதம் பதவியிலே**
**நட்டம் புயனையும் மாற்றுவிப் பார்அன்ன வர்இடத்தே**
**சட்டம் பலஉண்(டு) உனைப்போற்றப் பெற்றவர் தாட்டிகமே.**

**குறிப்புரை** : இட்டம்= விருப்பம். இந்திரனார் பட்டம்= இந்திரபதவி. பாரம்அன்றே= கடினமானதன்று. உன்னைப்போற்றப் பெற்றவர் தாட்டிகம், தம்பதவியிலேநட்ட அம்புயனையும் மாற்றுவிப்பார்; அன்னவர் இட்ட பலசட்டம் உண்டு என்க. தாட்டிகம்= அருள்வலிமை. தம்பதவியிலே நட்ட= தன்னை மனிதனாகப் பிறக்கச்செய்த. அம்புயனையும் மாற்றுவிப்பர்= பிரமனின் நிலையையும் மாறச்செய்வார். சட்டம்= கட்டளை.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! என்விருப்பம் வேறுஇல்லை. உன்னைப்போற்றுவோர் இந்திரபதவி பெறுவது கடினமானதன்று. அவர்கள் தமதுஅருள்வலிமையால் தன்னைப்பிறப்பித்த பிரமனும் பதவிகெடுமாறு செய்வர், அத்தகையோர் அவர்கட்கு - பிரமன்முதலியோர்க்கு இட்ட கட்டளை ( சாபம் ) பலவுண்டு.எனவே உன்அருள்பெற அருள்க.

**விளக்கம்** : தூமனத்து அடியவர் மனநிலை :

“ கொள்ளேன் புரந்தரன் மால் அயன்வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதுஅடி யாரொடு அல்லால் நரகம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலேஇருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே “ ( திருவாசகம். 6 )

அகத்தியர் போன்ற முனிவர்கள் இந்திரன்முதலியவர்கட்கு இட்ட சாபங்கள் - கட்டளைகள் பல.

87. **தாட்டா மரைதந்(து) அருள்உல கேபட்ட சஞ்சலங்கள்**
**கேட்டார் உருகுவர் கெட்டேன் இனிஎன் கிலேசம்எல்லாம்**
**பாட்டால் உரைசெயின் பட்டோலை கோடிபற் றா(து)அதைஓர்**
**ஏட்(டு)ஆ யிரம்வரி தீட்டவல் லார்சற்(று) எழுதுவரே.**

**குறிப்புரை** : தாள் தாமரை= திருவடியாகிய தாமரைமலர். கிலேசம்= வருத்தம். பாட்டால்= கவிதையால். பட்டோலை= காரியக்குறிப்பு எழுதும் பனைஓலை.

**பொழிப்புரை** : அருள்தரு உலகம்மையே! நான்பட்ட துன்பங்களைப்பற்றிக் கேட்டவர் மனம் உருகுவர். அந்த அளவு கெட்டேன். என்வருத்தங்களை எல்லாம் சொல்லி எழுதத்தொடங்கினால் பட்டோலைகள் கோடிக்கணக்கில் வேண்டும். ஒருபட்டோலையில் ஆயிரம் வரியளவு எழுதவல்லவர் மட்டுமே என்துன்பத்தைக் கோடிக்கு மேற்பட்ட ஏட்டில் ஓரளவு எழுதமுடியும்.

**விளக்கம்** : எழுதுவது பசியபனையோலையிலன்றிக் காய்ந்த ஓலையிலாதலின் அதனைப் பட்டோலை என்றார். இது காரணப்பெயர்...

88. **எழுதும் படியும் உருவேற்றும் போற்றும் இனச்சுரும்பர்**
**கொழு(து)உண் பரிமளக் கொந்தள நீலக் குயில்உலகாள்**
**முழுதும் கருணை புரிவாள் சனனமும் மோசனமாம்**
**பழுதும் தவிரும் கெடுவீர் எழுத்(து)ஓர் பதினஞ்சுமே.**

**குறிப்புரை** : எழுதும் படியும் உருவேற்றும் போற்றும்= எழுதுங்கள் படியுங்கள் உருவேற்றுங்கள் போற்றுங்கள். சுரும்பர் இனம்= வண்டினங்கள். கொழுது= குடைந்து. பரிமளக்கொந்தளம்= மணக்கும் கூந்தல். நீலக் குயில் உலகாள்= கருநீலநிறக் குயிலாகிய அருள்தரு உலகம்மை. சனனம்= பிறவி. மோசனம்= முடிவுபெறும். பழுதும் தவிரும்= வினைக்குற்றங்களும் நீங்கும். கெடுவீர்= வாழ்வில் கெட்டுப் போனவர்களே. எழுத்து ஓர் பதினஞ்சு= பதினைந்து எழுத்துகள்.

**பொழிப்புரை** : வாழ்வில் இதுவரை கெட்டுப்போனவர்களே! அன்னையின் எழுத்துகள்பதினைந்தயும் எழுதுங்கள், படியுங்கள், உருவேற்றுங்கள், போற்றுங்கள், வண்டினங்கள் குடைந்து பருகும் தேனுடைய மலர்சூடியதும், இயற்கைமணமுடையதும் ஆகிய கூந்தலுடைய நீலநிறக்குயிலாகிய அருள்தரு உலகம்மை அருள்புரிவாள்; வினைக்குற்றங்கள் நீங்கும்; பிறவியும் முடிவுபெறும் - வீடுபேறடைவீர்.

**விளக்கம்** : கருமை பசுமை நீலவண்ணங்களை அம்மைக்குக் கூறுவதுபற்றி நீலக்குயில் என்றார்

**இலக்கணக்குறிப்பு** : எழுதும், படியும், உருவேற்றும், போற்றும் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றுகள்.

89. **அஞ்சித் திரிந்து பெரியோரைக் காணில்அ யர்ந்துகெட்டேன்**
**கஞ்சிக்(கு) அலைந்து கவலைப்பட் டேன்சதங் கைத்திருத்தாள்**
**பஞ்சிக்(கு) இணங்கும் அழியாக் கருணை பழுத்தஅப**
**ரஞ்சிப் பசும்பொன் அருள்பாவ நாசத்(து) இருக்கவுமே.**

**குறிப்புரை** : இணங்கும்= ஒத்த. அபரஞ்சிப் பசும்பொன்= உயர்ந்த பொன்னாகிய கிளிச்சிறை.

**பொழிப்புரை** : பஞ்சுபோன்றதும், சதங்கையணிந்த தெய்விகம்பொருந்தியதுமாகிய திருவடிகளுடன் அழியாத பழுத்த கருணையுடன் மிக உயர்ந்ததாகிய கிளிச்சிறைப்பொன்னை அருள்கிறவளாய்ப் பாவநாசத்தில் உள்ள அருள்தரு உலகம்மை இருக்க, அவளைநாடாது, பெரியவர்களைக்கண்டதும் சோர்ந்து, அஞ்சி, ஓடிஒளிந்து கெட்டேன், குடிக்கும் கஞ்சிக்காக அலைந்து கவலைப்பட்டேன்.

**விளக்கம்** : நடுவணது - பொருள் / பொன் கிடைக்குமானால் ஓடிஒளியவோ கஞ்சிக்கு அலையவோ வேண்டுவதில்லை என்பதால் அம்மை அபரஞ்சிபொன் வழங்குவாள் என்றார்.

90. **இருக்கும் தலம்இலை யோமுக்க ளாநிழல் எந்தைஎல்லாம்**
**உருக்கும் கடவுள் முழுத்தீ உடம்பைஉன் மோகத்தினால்**
**உருக்கும் படிஅங்(கு) இருந்தாய் பொறுத்தது வோஇறுகிப்**
**பருக்கும் தனமுகை யாய்உல(கு) ஈன்றஉன் பச்சுடம்பே.**

**குறிப்புரை** : தலம்= இடம். எல்லாம் உருக்கும்= எல்லாவற்றையும் உருக்குகின்ற. கடவுள்= சிவபிரான். முழுத்தீ உடம்பு - தீ முழு உடம்பு= நெருப்பாச் செறிந்த உடம்பு. மோகம்= அன்பு. உருக்கும்படி= ஆற்றி இளகச்செய்ய. இறுகிப் பருக்கும் தனமுகையாய்= இறுகியும் பருத்தும் உள்ள தனமாகிய மொட்டுகளை உடையவளே. உன் பச்சுடம்பு= உலகீன்ற உன்இள உடம்பு. பொறுத்ததுவோ= அவனது தீயின் வெப்பத்தைப் பொறுத்துக்கொண்டதோ

**பொழிப்புரை** : இறுகிப் பருத்த தனங்களாகிய மொட்டுகளையுடையவளே! முக்களாநிழலில் இருக்கும் எம்தந்தையாகிய சிவபிரானின் அனைத்தையும் உருக்கும் நெருப்பாச்செறிந்த உடம்பின் வெப்பத்தை, அன்பினால் ஆற்றிஇளகச் செய்யும்பொருட்டு அவன் உடம்பில் இருந்தவளே! உலகை ஈன்ற உனது இளையஉடம்பு அந்நெருப்பின் வெப்பத்தைப் பொறுத்துக்கொண்டதோ.! நீ இருப்பதற்கு வேறுஇடம் ஒன்றும் இல்லையா? .

**விளக்கம்** : அரியும் அயனும், அடி முடிகாணவியலாது இருந்தவர் ஆதலின் அவருடம்பை முழுத்தீ உடம்பு என்றார். மகவீன்ற பெண்ணின் உடம்பைப் பச்சைஉடம்பு என்ற வழக்காற்றினையொட்டி, அண்டம் ஈன்றஅம்மையின் உடம்பைப் பச்சுடம்பு என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : தனமுகை - உருவகம்.

91. **பச்சைப் படிவத்(து) உலகே இரண்டு படிஉனக்குப்**
**பிச்சைப் படிநெல்லுப் பெம்மான் அளப்பது பேருலகம்**
**இச்சைப் படிக்(கு)உண்ண அன்றோஎனக்(கு) இல்லை எனில்இந்தக்**
**கொச்சைப் படிறன் பொருட்டால் அளக்கும் குறைப்படியே.**

**குறிப்புரை** : படிவம்= நிறம். இரண்டுபடி= இருநாழி. படி நெல்லு= அளவு நெல். பிச்சைப்பெம்மான்= பிச்சைஎடுக்கும் சிவபிரான். இச்சைப்படி= விருப்பப்படி. கொச்சைப்படிறன்= கீழான குறும்பன். குறைப்படியே அளக்கும்= குறைந்த அளவே தருவான்.

**பொழிப்புரை** : பச்சைநிறத்து அருள்தரு உலகம்மையே! உனக்கு, இருநாழிஅளவு நெல்லினை, பிச்சைஎடுத்த சிவபிரான் அளந்து தருவது இப்பேருலக உயிர்கள் தம்விருப்பப்படி உண்பதற்காகவல்லவா? எனக்கு உணவு இல்லைஎன்றால் இக்கீழான குறும்பனுக்காகத் தரவேண்டியதைக் குறைத்துக் குறைந்த அளவே தருவான். எனக்கும் அருள்புரி.

**விளக்கம்** : சிவபிரானைப் பிச்சைப்பெருமான் என்றார், தாருகாவனத்தில் பிச்சை எடுத்ததை எண்ணி.

92. **படிக்கும் கவியின் பயனாகச் சொல்லில் படுத்துவினை**
**முடிக்கும் படிஎன் முயற்சிகொண் டோவண்டு மூ(சு)எறிய**
**வெடிக்கும் தொடைமைக் குழல்உல கேஎன்று வேதம்எலாம்**
**வடிக்கும் பெயரைஎன் நாத்தழும் பேறவ முத்துவனே.**

**குறிப்புரை** : என்முயற்சி கொண்டு சொல்லில் படுத்துப் படிக்கும் கவியின் பயனாக என்க. வினைமுடிக்கும்படி= என்வேண்டுதலை நிறைவேற்றுமாறு. மூசுஎறிய= மொய்க்க. வெடிக்கும்= மலரும். தொடை= மலர்மாலை. மைக்குழல்= .கருங்கூந்தல். வடிக்கும்= வெளிப்படுத்தும் - கூறும்.

**பொழிப்புரை** : என்முயற்சியினால் சொல்லில் அமைத்து பாடும் கவிதையின் பயனாக, என்வேண்டுதலை நிறைவேற்றும் உன்முயற்சிக்கு, வண்டுகள் மொய்த்தலால் மலரும் மலர்மாலைசூடிய கருமையான கூந்தலுடையவளே என்று வேதங்கள் கூறும் உன்பெயரை நான் நாத்தழும்புபடச் சொல்லி அழைத்துப் போற்றுவேன்.

93. **வழுத்த நினைக்கிலன் மா(து)உல காளைஎன் மண்டைவிதி**
**எழுத்தை வெறுப்ப(து) இனிஏது கண்ட(து)எல் லாம்புசித்துக்**
**கொழுத்த விடக்(கு)உட லான்வந்த பாவம்ஓர் கோடிஎன்னைக்**
**கழுத்தை முறிக்கும் சுமைப்பாரம் மெத்தக் கனக்கின்றதே.**

**குறிப்புரை :** வழுத்த= வழிபட. மண்டைவிதி= தலைவிதி. எழுத்து= தலைஎழுத்து. இனிஏது= இனி இல்லை. விடக்கு உடல்= சதையுடைய உடம்பு. மெத்த= மிக

**பொழிப்புரை :** உமையம்மையை வழிபட நினைக்கவில்லை. எனவே என்தலையில் எழுதிய தலைஎழுத்தை வெறுத்துப் பயனில்லை. கண்டவற்றைஎல்லாம் உண்டு கொழுத்த சதையுடைய உடம்பால் வந்த பாவச்செயல்கள் ஒருகோடியளவாகும். அதன்பயனான பாவச்சுமை மிகக்கனத்து என்கழுத்தை முறிக்கின்றது. இனிஎன்செய்வேன், அருள்க.

94. **கனமுண்ட கூந்தல் உலகேஉன் சந்நிதி காத்திருக்க**
**மனமுண்டு பாழ்த்த வறுமைஒட் டாதுவலி யச்செய்யும்**
**இனமுண்டு நீகொடு போய்நெடுந் தூரம் இவனைஅங்கே**
**தனமுண்டு காட்(டு)என் றதுகேட்(டு) அதுவும் தடையுண்டதே**

**குறிப்புரை :** கனமுண்ட= அடர்தியால் கனத்த. மனம்= விருப்பம். பாழ்த்த= பாழான. வறுமை= அறிவின்மை . வலியச்செயும்= கேட்காது விருப்புடனுதவும். கனம்= கூட்டம். நீ நெடுந்தூரம் இவனைக் கொடுபோய்த் தனமுண்டு காட்டு என்க. தனம்= பெருஞ்செல்வம்

**பொழிப்புரை :** அடர்த்திகாரணமாகக் கனத்த கூந்தலுடைய அருள்தரு உலகம்மையே! உனது திருமுன் உன் அருளுக்காகக் காத்திருக்க விருப்பம்உண்டு. ஆனால் பாழான அறிவின்மை அப்படிச் செய்யமுடியாமல் தடுக்கும். தானே உவந்து உதவும் கூட்டம் உள்ளது, எனவே இவனை அழைத்துக் கொண்டுபோய் அங்குள்ள பெருஞ்செல்வத்தைக்காட்டு என்று நீ கூறியது கேட்டும்கூட, அதுவும் தடைப்பட்டுவிட்டது. என்செய்வேன்!

95. **உண்டார் கடல்விடம் உன்மண வாளர்அன்(று) உண்கையிலே**
**கண்டாள் உலகம்மை கண்டத்தி லேமலர்க் கையைவைத்துக்**
**கொண்டாள் பிற(கு)அங்(கு) அமுதா ன(து)என்பது கொண்(டு)இவட்கு**
**விண்டால் என்கவி நன்கவிஆம் என்றுவிண்டு கொண்டனனே.**

**குறிப்புரை :** அமுதுஆனது= அமுதமாயிற்று. கொண்டு= எண்ணி. விண்டால்= சொன்னால். விண்டுகொண்டனன்= பாடினேன்.

**பொழிப்புரை :** முன்னாளில் உன்கணவர் பாற்கடலில் எழுந்த நஞ்சினை உண்டார். உண்ணும் அப்பொழுது அவர்செயலை அருள்தரு உலகம்மை கண்டாள். அவரது கழுத்தில் தனது மலரொத்த கையை வைத்து நஞ்சு உள்ளிறங்காமல் தடுத்தாள். அந்நிலையில் நஞ்சு அமுதானதைப்பார்த்து, என்கவிதையைச் சொன்னால் பயன்தரும் நல்லகவிதையாகும் என்று எண்ணி என்கவிதையைச் சொன்னேன். அருளினாள்.

96. **விண்தலம் நின்ற சரற்கால சந்த்ர சுவேதமுக**
**மண்டல மும்கை மலரொடும் தோளின் வழிந்தரத்ன**
**குண்டல மும்பொலி வாலப் பிராயக்கு மாரத்தியாய்**
**செண்(டு)அலர் செங்கை உலகாள்என் நாவில் சிறந்தனளே.**

**குறிப்புரை** : விண்தலம்= வானில். சரற்காலம்= மாரிக்காலம். சந்ரசுவேதம்=சந்திரன்போல்தூய. முகமண்டலம்= வட்டமான திருமுகம். வழி= சரிந்த. வாலபிராய குமாரத்தி= இளம்வயதுடைய பெண் அலர்செண்டு= மலர்ச்செண்டு. சிறந்தனள்= கவிதையாகச் சிறந்து விளங்கினாள்.

**பொழிப்புரை** : வானில் பொலியும் மாரிக்கால முழுநிலவுபோல் தூயதிருமுகமும், கைகளாகிய தாமரைகளும், தோளில் சரியும் நவரத்தினகுண்டலமும் கொண்டு, பொலிவுடன் விளங்கும் இளம்வயதுப் பெண்ணாய், மலர்ச்செண்டினைச் செங்கையில்ஏந்திய அருள்தரு உலகம்மை என்நாவில் - சொற்களில் சிறந்து விளங்கினாள்.

**இலக்கணக்குறிப்பு** : சந்திரசுவேத முகம் - உவமைத்தொகை. கைமலர் - உருவகம். செங்கை - பண்புத்தொகை. நா - இடவாகுபெயர்.

97. **சிறப்பார் சிறப்பின் உலகாள் அடியவர் சிந்தைக்(கு)என்ஆம்**
**பிறப்பார் பிறப்பும் பெறுவார் தவமும்அப் பேறுதப்பி**
**இறப்பார் இறப்பும் இறவாமை வேண்டும்என்(று) இல்லறத்தைத்**
**துறப்பார் துறப்பு நகைக்(கு)இடம் ஆனஇத் தொண்டனுக்கே.**

**குறிப்புரை** : சிறப்பின் உலகாள் அடியவர் சிறப்பார்= சிறப்புடைய அருள்தரு உலகம்மையின் அடியவர் சிறப்புறுவர். சிந்தைக்கு என் ஆம்= மனத்தில் உண்டான. பிறப்பு ஆர் பிறப்பும் தவமும் பெறுவார்= பிறப்பிற் சிறந்த மனிதப்பிறப்பும் அதில் தவமும்பெறுவார். அப்பேறு தப்பி= தவம்செய்யும் வாய்ப்புத்தவறி. இறப்பு ஆர் இறப்பும்= வாதனைபடாத இறப்பும். இறவாமை வேண்டுமென்று= இறப்பில்லாவீடுபேறு பேறு வேண்டும் என்று. இல்லறத்தைத் துறப்பார் துறப்பு = இல்லறதைத் துறப்பவர் துறவு. இத்தொண்டனுக்கு நகைக்கு இடம் ஆன= அடியவனாகிய என் நகைப்புக்கு இடமானது.

**பொழிப்புரை** : சிறப்புடைய அருள்தரு உலகம்மையின் அடியவர் சிறப்புறுவர். மனத்தில் நினைத்தபடி பிறப்பில் சிறந்த பிறப்பும் - மனிதப்பிறப்பும் தவமும் பெறுவர். தவம் செய்யும் வாய்ப்புத் தவறின் வாதனைபடாத இறப்பும், இறவாத வீட்டின்பமும் வேண்டும் என்றும் விரும்புவர். இல்லறத்தை விட்டுத் துறவியாகிறவர் நிலை, அம்மையின் தொண்டனாகிய என் நகைப்புக்கு இடமாகும்.

**விளக்கம்** : தொண்டில் ஈடுபாடு மிக்கஅடியவர், மனிதப்பினை விரும்பிக் கேட்பர். இதனை :

" குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
**மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே** "

என்ற அப்பரடிகளின் வாக்குக்கூறும். மேலும், காரைக்கால் அம்மையின் வேண்டுதல் பற்றிச் சேக்கிழார்;

" இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னைஎன்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்துபாடி
அறவாநீ ஆடும்போது உன்அடியின்கீழ் இருக்க என்றார். " ( பெரியபுரா. 1781 )

துறவியானால்தான் வீடுபேறு என்பதை இச்செய்யுள் மறுத்து இல்லறத்தர்க்கும் வீடுபேறு உண்டு என்பதை வலியுறுத்தக் காரணம், வீடுபேறு பெற்ற அறுபத்து மூவருள் பலர் இல்லறத்தாரே என்பதாகும்.

ஆறறிவு காரணமாக, மனிதப்பிறவி மேலானபிறவி என்பதை ஔவையார்;

" அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது " என்பார்.

98. **தொண்டைக் கனிவிள்ள வள்உகிர் வீணை துளாவநெடும்**
**கொண்டைச் சொருக்குப் புறம்தாழ ஓலைக் குழைதடவும்**
**சண்டைக் கயலும் சிவப்(பு)ஏற மாதங்கி சாமளையாம்**
**பண்டைப் படிவத்(து) உலகாள் அருள்வந்து பாலிக்குமே.**

**குறிப்புரை** : தொண்டைக்கனி விள்ள= கொவ்வைப்பழம் ஒத்த உதடுகள் திறக்க ( பாடுதல் குறித்தது ) வள் உகிர்= வலிமையான நகம். துளாவ= மேலும்கீழும் தடவ. கொண்டைச் சொருக்க= சொருகிய கொண்டை. புறம்தாழ= பின்புறம் தொங்க. ஓலைக்குழை தடவும்= ஓலையாகிய காதணியைத் தொட்டுச்செல்லும். சண்டைக் கயல்= சண்டையிடுவபோன்று மோதும் கண்களாகிய கெண்டைமீன்கள். மாதங்கி சாமளை= பார்வதியாகிய பசுமைநிறத்தவள். பண்டைப்படிவம்= அம்மையப்பர் உரு. பாலிக்கும்= காக்கும்.

**பொழிப்புரை** : தனது கொவ்வைக்கனி ஒத்த உதடுகள் திறந்துபாட, வலிமையான நகம் சுரத்துக்கு ஏற்ப வீணை நரம்புகளைத்தடவ, கொண்டையிட்டுச் சொருகிய நீண்ட கூந்தல் பின்புறம் தொங்க, ஓலையாகிய காதணியை மோதிமீளும் கெண்டைமீன்களாகிய கண்கள் சிவப்புற, பசிய நிறத்தவளாய் அம்மையப்பர் திருமேனியில் அமைந்த பார்வதி தேவியாகிய அருள்தரு உலகம்மைஅருள்வந்து காக்கும்.

99. **பாலான வேலையில் சிந்தா மணிமண் டபத்தின்மறை**
**நாலான பீடத்தை ஞானாந்தம் ஆயஅருள் ஞாயிறுபோல்**
**மாலான தேவர்கள் காலான மஞ்சத்து வந்திருக்கும்**
**மேலான வாழ்வையும் கண்டேன் பொருநைக்கு மேல்புறத்தே.**

**குறிப்புரை** : பாலான வேலையில்= பாற்கடலில். சிந்தமணி மண்டபத்து= தெய்விக மணியாகிய சிந்தாமணியாலான மண்டபத்தில். மறைநாலாய பீடத்தை= நான்மறைகளும் கால்களாக இருந்து தாங்கும் இருக்கையை, ஞானானந்தம் ஆய= ஞானத்தால் விளையும் பேரின்பமயமாக விளங்கும். அருள்ஞாயிறு= அருளேவடிவான சூரியன். மாலான தேவர்கள்= திருமால் முதலிய தேவர்கள். மறை நாலான காலான பீடத்தை மஞ்சத்து வந்து இருக்கும் மேலான வாழ்வை என்க. மேலான வாழ்வை= மேலான வாழ்வாக - வீடுபேறாக விளங்கும் அப்பனையும் - சிவபிரானையும்.

**பொழிப்புரை** : பாற்கடலில்தோன்றிய தெய்விகமணியாகிய சிந்தாமணி மண்டபத்தில், நான்குவேதங்களும் கால்களாக இருந்துதாங்கும் பீடத்துஇருக்கையில், ஞானத்தால் விளையும் பேரின்ப மயமான அருளைவழங்கும் ஞாயிறுபோல் மேலான வாழ்வாக - வீடுபேறாக வீற்றிருக்கும், சிவபரம் பொருளையும் திருமால் முதலிய தேவர்கள் சூழ, பொருநையாற்றின் மேற்புறம் கண்டேன்.

**விளக்கம்** : சிவபரம்பொருளே வீடுபேறு என்பது மெய்கண்டதத்துவமாதலின் அவனை மேலான வாழ்வு - வீடுபேறு என்றார்.

" மண்ணாளும் மன்னவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்ணாளும் தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானை " ( திருமுறை )

சிவபிரானை மேலானவாழ்வையும் என்று உம்மைகொடுத்துக்கூறியமையால் உம்மையால் அம்மையையும் குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : அருள் ஞாயிறு - உருவகம். மேலான வாழ்வையும் - உம்மை எச்சவும்மை.

100. **மேலைக் கடவுள் இடப்பாக மும்துள்ளு வெள்அருவி**
**மாலைப் பொதிய வரைச்சார லும்நின்ற வண்ணமும்தாள்**
**காலைக் கமலமும் கல்யாண விக்ரக காந்தியும்பொன்**
**ஓலைக் குழையும் குழற்காடும் வாழி உலகம்மையே.**

**குறிப்புரை :** மேலைக்கடவுள்= தலைமையான கடவுள் - சிவபிரான். வெள்ளருவி மாலை= வெண்மையான அருவியாகிய மலர்மாலை. காலைக்கமலம்= காலையில் மலர்ந்தசெந்தாமரை - புத்தம் புதுப்பூ. காந்தி= ஒளி.

**பொழிப்புரை :** தலைமைக்கடவுளாகிய சிவபிரானின் இடப்பாகத்திலும், துள்ளிக்குதிக்கும் வெண்மையான - தூய - அருவியாகிய மலர்மாலையணிந்த பொதிகைச்சாரலிலும் வீற்றிருந்து, நிலைத்த அழகும்,காலையில் மலர்ந்த புத்தம்புதுத் தாமரைத்திருவடிகளும், அருள்தரு கல்யாணசுந்தரி திருக்கோலதில் உள்ள ஒளியும், பொன்னாலான காதணியும், கூந்தற்காடும் கொண்டு அருள்புரியும் அருள்தரு உலகம்மையே வாழ்க.

**விளக்கம் :** வாழ்த்துவோர் வாழ்த்தப் பெறுவர். வானவர் சிவபிரானை வாழ்த்துவது தாம் வாழவே. இதனை

வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மைஎலாம் தொழவேண்டி " ( திருவாசகம். 20 )

.

திருச்சிற்றம்பலம்